# அதிசயமான கற்பனை!

## அசாதாரண நிகழ்ச்சிகள்!

ஏவிஎம் புரொடக்ஷன்ஸ்

# ஓர் இரவு

## விரைவில் வருகிறது




கதை, வசனம் :– C.N.அண்ணாதுரை, M.A.,

1 — 8.4



உலகெங்கும், வெற்றிபெற்ற மனிதர்கள்

# ஜில்லெட்

## உபயோகிக்கிறார்கள்...




ஒரு தனவந்தர்கூட, தினமும் ப்ளு ஜில்லெட் பிளேடை உபயோகிக்கும் சாதாரண மனிதனைவிட ஆனந்தமான க்ஷவரத்தை அனுபவிக்க முடியாது. மிகவும் கூராக தீட்டப்பட்ட இதன் விளிம்புகள் வழவழப்பான, சுகபோக க்ஷவரத்தை உங்களுக்கு அளிக்கிறது. மின்சாரத்தால் பதப் படுத்தப்பட்டதும், பிரத்தியேகமாக வலுவாக்கப்பட்டதுமான இந்த எஃகு பிளேடுகளால் அதிக தடவைகள் க்ஷவரம் செய்து கொள்ளலாம். விலை மிகவும் சகாயமாயிருப்பதால், ஒவ்வொரு மனிதனும் உலகில் மிகவும் நாகரீகமான மனிதர்களின் விருப்பத்திற்குட்பட்ட கூட்டத்தில் சேரலாம்.

# ப்ளு ஜில்லெட் பிளேடுகள்

5 பிளேடுகளுக்கு 14 அணா

# இயற்கையாகவே நேரத்தை அறிவிப்பவை

## வெண்நிறக் கழுத்துடைய ஓர் குருவி

இயற்கைக்கே ஒவ்வாதவாறு காலந் தவறாமலும் ஒழுங்காகவும் செய்கைகளை ஆற்றும் பக்ஷிகளின் அநேக வாழ்க்கைக் குறிப்புகள் பக்ஷி சாஸ்திர நூல்களில் உள்ளன. உதாரணமாக, வட அமெரிக்காவிலுள்ள ஓர் வகை வெண்நிறக் கழுத்துடைய குருவி பிரதி வருஷமும் ஒரே குறிப்பிட்ட இடத்திற்கு வந்து சென்ற வருஷம் போலவே அதே தினத்தில் அதே கூட்டில் அகப்பட்டுக் கொள்கிறது.

இத்தகைய பிழைபடாத இயற்கையறிவு நம்மிடம் இல்லாது போயினும் காலந்தவறாது குறிப்பிட்டபடி காரியங்களைச் செய்ய ஒரு பேவர் லூபா கடிகாரத்தின் உதவி இருப்பது நம் அதிர்ஷ்டமே.

அதிர்ச்சி தண்ணீர் இவற்றால் பாதிக்கப்படாமலும் காந்தக் கவர்ச்சியற்றதுமான ஸாண்டோ "ஆல் ரௌண்ட்" கடிகாரங்கள் இப்போது நான்குவித மாடல்களில் உள்ளன.








**சாண்டோ**

3252 ரோல்டு கோல்டு முகப்பும் ஸ்டீல் பின்புறமும் கொண்டது (படத்தில் உள்ளதுபோல) ... ரூ. 160/-

3262 மேற்கூறியதுபோலவே நடுவில் விநாடி முள்ளுடனும் ரூ. 168/-

3253 படத்தில் உள்ளதுபோலவே முழுதும் ஸ்டீலினாலாகிய கேஸுடன் கூடியது. ... ரூ. 140/-

3263 மேற்கூறியதுபோலவே நடுவில் விநாடி முள்ளுடனும் ரூ. 148/-

**பேவர்-லூபா & கோ., லிட்., பம்பாய் ★ கல்கத்தா**

# பொருள் அடக்கம்

கல்கி

தமிழ்த்திரு நாடு தன்னைப் — பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார்

மலர் 10 இதழ் 36 | 1951 ஏப்ரல் 8 | விக்ருதி ௵ பங்குனி 26௳





## குரங்கு மத்தியஸ்தம்!





# கல்கி

# நெருப்புடன் விளையாட்டு!

என்ன சொன்னார்கள்? வடையைத் தட்டச் சொன்னார்களா? அல்லது துளையை எண்ணச் சொன்னார்களா?

ஐக்கிய நாடுகள் சபையினிடம் பாரத நாடு கூறிய புகார் என்ன? "இந்தியாவுடன் ஐக்கியம் அடைந்த காஷ்மீர் மீது பாகிஸ்தான் அநீதியாகப் படையெடுத்துச் சில பகுதிகளையும் ஆக்கிரமித்துக் கொண்டிருக்கிறது. அது சர்வதேசச் சட்டத்துக்கு விரோதமான பெரும் குற்றம். எனவே அவ்விஷயமாகத் தகுந்த பரிகார முறைகளைக் கைக்கொண்டு இந்தியாவுக்கு நீதி வழங்க வேண்டும்" — இதுதான் இந்தியாவின் முறையீடு.

மிகத் தெளிவான, சிக்கல் எதுவும் இல்லாத இந்தியாவின் மேற்படி கோரிக்கையை, ஆங்கிலோ—அமெரிக்க ஆதிக்கத்துக்கு உட்பட்டிருக்கும் ஐக்கிய நாடுகள் சபை சென்ற மூன்றரை வருஷ காலமாகக் கஷ்டப்பட்டு உருத் தெரியாமல் குழப்பி விட்டது!

காஷ்மீரில் பாகிஸ்தான் ஆக்கிரமித்தது குற்றமா, இல்லையா? இவ் விஷயத்தை முடிவு செய்ய ஐ. நா. சபை முயற்சித்திருக்குமாயின், பல மாதங்களுக்கு முன்பே காஷ்மீர் பிரச்னை திருப்திகரமாகத் தீர்ந்திருக்கலாம். அப்படிச் செய்ய ஆங்கிலோ-அமெரிக்க வல்லரசுகளுக்கும் பாகிஸ்தானுக்கும் இஷ்டமில்லை.

சர்வ தேசிய விஷயங்களில் இந்தியா தங்களை ஆதரிக்கும்படி செய்வதற்காக மேற்படி வல்லரசுகள் காஷ்மீர் பிரச்னையை ஒரு கருவியாக உபயோகித்து வருகின்றன. இந்தியா மீது வெளி நாடுகளில் துஷ்பிரசாரம் செய்வதற்குப் பாகிஸ்தான் அந்தப் பிரச்னையை ஒரு கருவியாக உபயோகித்து வருகிறது.

காஷ்மீர் விஷயமாக இந்தியாவுக்கும் பாகிஸ்தானுக்கும் அபிப்பிராய பேதம் தீராததால், ஒரு மத்தியஸ்தரை நியமிக்கவேண்டும்; அந்த மத்தியஸ்தரின் முடிவை இரு நாடுகளும் ஒப்புக் கொண்டு தீரவேண்டும் என்று சென்ற வாரம் ஐ. நா. பாதுகாப்புச் சபையில் ஒரு தீர்மானம் நிறைவேறி யிருக்கிறது. அது எவ்வளவு அநீதியான, ஆபத்தான தீர்மானம் என்பதை அந்தச் சபையில் பேசிய இந்தியப் பிரதிநிதியும், இந்தியா பார்லிமெண்டில் பேசிய பண்டித ஜவாஹர்லால் நேருவும் தெளிவாக எடுத்துக் காட்டி யிருக்கிறார்கள்.

காஷ்மீரில் உள்ள நாற்பது லட்சம் ஜனங்களுக்குத் தங்கள் தலைவிதியை நிர்ணயித்துக் கொள்ள உரிமை இல்லை. அந்த உரிமை ஐ. நா. சபை நியமிக்கும் ஒரு தனி நபருக்கு அளிக்கப்பட்டிருக்கிறது! — அந்தச் சபை நிறைவேற்றியுள்ள தீர்மானத்தின் இலட்சணம் இது தான்!

காஷ்மீர் விஷயமாக இதுவரையில் யாதொரு திருப்திகரமான முடிவும் ஏற்படாததற்கு யார் பொறுப்பாளி என்பதைப் பார்க்கலாம்.

காஷ்மீர் போருக்கும் தனக்கும் யாதொரு சம்பந்தமும் இல்லை என்று பாகிஸ்தான் கூறியது உண்மையல்ல என்பதை முதலில் நியமிக்கப்பட்ட ஐ. நா. சபைக் கமிஷன் ஒப்புக்கொண்டது அல்லவா? அவ்விஷயமாக மேற்படி சபை என்ன நடவடிக்கை எடுத்துக் கொண்டது?

காஷ்மீரில் உள்ள எல்லாத் துருப்புகளையும் பாகிஸ்தான் முதலில் வாபஸ் செய்து கொள்ள வேண்டும் என்று அதே கமிஷன் கூறியதற்கு அந்தச் சபையினால் என்ன விமோசனம் ஏற்பட்டது?

பாகிஸ்தான் காஷ்மீரில் புரிந்த ஆக்கிரமிப்புக் குற்றம் சர்வ தேசச் சட்டத்துக்கு விரோதமானது என்று நீதி நிபுணர் சர் ஓவன் டிக்ஸன் கூறியதை ஒட்டி ஐ. நா. சபை என்ன முறைகளைக் கைக்கொண்டது?

# மாய விமானத்தின் மர்மம்!























......ஸிட்னி காட்டன் ஆயுதங்களைக் கொரியப் போர் முனையில் விற்க டில்லி மார்க்கமாகப் பறந்து சென்றிருக்கலாம்....

... அல்லது லியாகத் அலிகான் தமக்கு எதிராகச் சதிகாரர்கள் செய்த சூழ்ச்சியைக் கண்டு பிடிக்க வந்திருக்கலாம்..

நேத்தாஜி சுபாஷ் சந்திர போஸ் தமது தாய்த் திருநாட்டுக்குத் திரும்பிவர முயன்றிருக்கலாம்.

SHASTRI

எனவே, இதுவரையில் காஷ்மீர் பிரச்னை தீராததற்கு ஐ. நா. சபையும் அதை ஆட்டி வைக்கும் வல்லரசுகளும்தான் பொறுப்பாளிகள் என்பதற்கு இவற்றைக் காட்டிலும் ஆதாரம் வேறு வேண்டியதில்லை.

பெரு முயற்சி செய்து உலகம் முழுதும் தேடித் திரிந்து தேர்ந்தெடுக்கப்பட்ட நீதி நிபுணர் சர் டிக்ஸன் கடைசியாகக் கூறியிருந்த யோசனையை அனுசரித்து, அந்தப் பிரச்னையைத் தீர்த்துக் கொள்ளும் பொறுப்பைச் சர்வதேச சபை இந்தியா — பாகிஸ்தானிடமே விட்டிருக்கலாம்.

அவ்விதம் செய்யாமல் இப்போது மேற்படி சபை செய்துள்ள விபரீதமான தீர்மானம் நீதியுடன், நெருப்புடன் விளையாடுவதாக இருக்கிறது!

# கிராமமே! பிழைத்துப் போ!

நம்முடைய கிராமங்களின் அதிர்ஷ்டமே அதிர்ஷ்டம், போங்கள்!

காந்தி மகாத்மா இந்தியா தேசத்திலுள்ள ஏழு லட்சம் கிராமங்களைப்பற்றிப் பெருங் கவலைப்பட்டு ஓயாமல் பேசி வந்தார் அல்லவா!

ஏழு லட்சம் கிராமங்களின் நலனுக்காகவும் அந்தக் கிராமங்களில் வாழும் ஜனங்களின் சுக வாழ்வுக்காகவுமே தாம் சுதந்திரப் போர் நடத்துவதாகச் சொல்லி வந்தார் அல்லவா!

கடைசியில், 'சுதந்திரமும் வந்தது அல்லவா! சுதந்திரம் வந்து, நம் காங்கிரஸ் மந்திரிகள் ஆட்சி செலுத்துகிறார்கள் அல்லவா!

அடாடா! கிராமங்களுக்காக நம் காங்கிரஸ் மந்திரி சபையார்செய்யும் அருமையான சேவைகளை என்னவென்று சொல்வது!

வருகிற வருஷத்தில் கிராமத்துக்கு ஒரு ஆஸ்பத்திரி ஏற்படுத்தச் சென்னை மந்திரிசபை தீர்மானித்து அதற்கு வரவு செலவுத் திட்டத்திலும் ஏற்பாடு செய்திருக்கிறது.

"கிராமத்துக்கு ஒரு ஆஸ்பத்திரி" என்றால் தவறாக அர்த்தம் செய்துகொள்ள வேண்டாம். சென்னை மாகாணத்திலுள்ள ஒவ்வொரு கிராமத்துக்கும் ஒவ்வொரு ஆஸ்பத்திரி வீதம் ஏற்படுத்திவிடப் போவதாக எண்ணி மிரண்டு போய் விட வேண்டாம்!

அப்படிப்பட்ட பிரம்மாண்டமான தவறுகளை நம் சென்னை மந்திரி சபையார் ஒரு நாளும் செய்துவிட மாட்டார்கள்!

இந்தச் சென்னை மாகாண முழுவதற்கும்— தமிழ்நாடு, மலையாளம், ஆந்திரம், ராயலசீமை,—எல்லாவற்றிற்கும் சேர்த்து, ஒரே ஒரு ஆஸ்பத்திரியை ஏற்படுத்தப் போகிறார்கள்!

அந்தப் பெரும் பாக்யத்தை ஆந்திர மாகாணம் அடையப் போகிறது.

(சென்னை சர்க்கார் ஆந்திர ஜில்லாக்களைக் கவனிப்பதில்லை என்று அடிக்கடி புகார் சொல்லும் ஆந்திர சகோதரர்கள் இனி அத்தகைய புகார் சொல்ல மாட்டார்கள் என்று நம்புகிறோம்.)

மேற்கு கோதாவரி ஜில்லாவில் ஏலூர் பட்டணத்துக்குப் பக்கத்தில் உள்ள தண்டலூர் என்ற கிராமத்தில் நாளது புண்ணியகரமான 1951-ம் வருஷத்தில் ஒரு கிராம ஆஸ்பத்திரி கட்டத் திட்டம் போட்டிருக்கிறார்கள்!

அந்தக் கிராமத்தில் யாரோ ஒரு பெண்மணி, (வேறு நல்ல காரியத்தில் பணத்தைச் செலவழிக்கத் தெரியாமல்), ஒரு கிராம ஆஸ்பத்திரி கட்டுவதற்காக மூப்பதினாயிரம் ரூபாய் நன்கொடை அளித்திருக்கிறாராம்!

அதற்கு மேலே நமது தாராள மனம் படைத்த காங்கிரஸ் சர்க்கார் இன்னும் கொஞ்சம் பணம் போட்டு ஒரு கிராம ஆஸ்பத்திரி கட்ட உத்தேசித்திருக்கிறார்களாம்!

சென்னையிலும் மற்றப் பட்டணங்களிலும் உள்ள ஆஸ்பத்திரிகளை விஸ்தரிக்கவும் புனர் நிர்மாணம் செய்யவும் கேவலம் ஒரு கோடி சொச்சம் ரூபாய்தான் செலவழிக்கப் போகிறார்கள்.

ஆனால் கிராம ஆஸ்பத்திரிக்கோ ஆயிரக் கணக்கில் செலவழிக்கப் போகிறார்கள்.

கிராம நிர்மாணம், கிராமத் தொண்டு, "கிராமங்களுக்குத் திரும்பிப் போ!"—முதலிய அர்த்தமற்ற இயக்கங்களில் ஈடுபட்டவர்கள் இனி நம் சென்னை சர்க்காரைக் குறை சொல்ல மாட்டார்கள் என்று நம்புகிறோம்.

காந்தி மகாத்மாவின் ஆத்மாவும் தண்டலூர் என்னும் கிராமத்தில் ஏற்படப் போகும் கிராம ஆஸ்பத்திரியைப் பார்த்துப் பரிபூரண சாந்தி அடையும் என்று நம்புகிறோம்.

# பாகிஸ்தான் பதினைந்து

மேற்குப் பஞ்சாப்பில் நடந்த அதிசயத்தைக் கேட்டீர்களா! அங்கே முஸ்லிம் லீக் மாபெரும் மகத்தான பிரமாத அபார வெற்றி அடைந்து விட்டது.

சமீபத்தில் அங்கு சர்வ ஜன வோட்டுரிமையின் பேரில் நடந்த தேர்தலில் 100-க்கு 30 வோட்டர்கள் போலிங் ஸ்டேஷனுக்குச் சென்று வோட்டுப் போட்டுத் தொலைத்தார்கள். இப்படி வோட்டுப் போட்ட 100-க்கு 30 பேரில் 15 பேர் முஸ்லிம் லீக் அபேட்சகர்களுக்குத் தங்கள் வோட்டைக் கொடுத்தார்கள்!

இத்தனைக்கும், தேர்தலுக்கு ஒரு வாரத்துக்கு முன்னால்தான், பாகிஸ்தான் அரசாங்கத்தைக் கவிழ்ப்பதற்குப் பயங்கரமான சதியாலோசனை நடந்தது வெளிப்படுத்தப்பட்டது. இராணுவ காரியாலயத் தலைவர் மேஜர் ஜெனரல் அக்பர் கானும் வேறு சில இராணுவ அதிகாரிகளும் கைது செய்யப்பட்டார்கள்.

இப்படியிருந்தும், பாகிஸ்தானைக் காப்பாற்றுவதற்காக முஸ்லிம் லீகர்களுக்கு வோட்டுப் போட 100-க்கு 15 பேர் வீதம் வீட்டை விட்டு வெளிக் கிளம்பினார்கள்!

இந்த 100-க்கு 15 வோட்டுகளைப் பெற்ற முஸ்லிம் லீகர்கள், மொத்தம் 197 அங்கத்தினர் அடங்கிய மேற்குப் பஞ்சாப் சட்ட சபையில் 141 பேர் வந்து விட்டார்களாம். எனவே இவர்கள்தான் புது மந்திரி சபையை அமைத்து அரசாங்கத்தை நடத்த வேண்டும்.

இது ஒன்றும் பிரமாதமில்லைதான்! மந்திரி சபை அமைப்பதில் கஷ்டம் ஒன்றும் ஏற்படாது என்று தெரிகிறது. ஏனெனில் மேற்படி 141 பேரில் குறைந்த பட்சம் 60 பேர் "மந்திரி வேலை பார்ப்பதற்குத் தயார்!" என்று முன் வந்திருக்கிறார்களாம். மற்றவர்களுக்கும் மந்திரி வேலை கொடுத்தால் "வேண்டாம்" என்று சொல்லப் போவதில்லை! ஆகவே, மந்திரி சபை அமைப்பதில் கஷ்டம் ஒன்றும் ஏற்படப் போவதில்லை! பல வருஷமாக மந்திரி சபை ஏற்படுத்த முடியாமல் நின்றாடி, கவர்னர் நிர்வாக சபையின் யதேச்சாதிகார ஆட்சி நடந்து வந்த மேற்குப் பஞ்சாபுக்குக் கதி மோட்சம் சீக்கிரம் பிறந்து விடும்!

* * *

சுதந்திர இந்தியாவிலும் இந்த வருஷக் கடைசியில் சட்டசபைத் தேர்தல்கள் நடைபெறப் போகின்றன. சர்வஜன வாக்குரிமை அடிப்படையில்தான் நடக்கப் போகின்றன.

நூற்றுக்கு எத்தனை பேருடைய வோட்டைப் பெற்று நம்முடைய அபேட்சகர்கள் வெற்றி பெற்று வரப் போகிறார்கள் என்று பார்க்க வேண்டும்.

அவர்களில் எவ்வளவு பேர் மந்திரி உத்தியோகம் ஏற்கும் மகா தியாகத்துக்குத் தயாராக முன் வருவார்கள் என்பதையும் பார்க்க வேண்டியதுதான்!

# பத்தினித் தெய்வம்

"—தென்சை
அன்னும் சிலப்பதிகார மென்றோர் மணி
ஆரம் படைத்த தமிழ்நாடு"

என்று பாரதியார் புகழ்ந்தேத்திய தமிழ்ப் பெருங் காவியத்தைத் தமிழகத்துப் பூர்வீகப் பண்பாட்டின் பொக்கிஷம் என்று சொல்லலாம். சிலப்பதிகாரக் காவியம் தமிழ் நாட்டில் இவ்வளவு சிறப்பு அடைந்ததற்கு ஒரு முக்கிய காரணம் கற்பரசியான கண்ணகியின் சோகக் கதையாகும். கணவன் நெறி தவறி நடந்த காலத்திலும் கண்ணகி தான் நெறி பிறழாது நடந்து கொண்டு அவனை மீட்பதற்காகப் பெருந் துன்பங்களை ஏற்றுக் கொண்டாள். இதனால் பழந்தமிழர்கள் கண்ணகியைப் பத்தினித் தெய்வமாக்கிக் கொண்டாடினார்கள். தமிழ் மன்னர்கள் அவளுடைய நினைவுக்காகக் கல்நாட்டி விழா நடத்தினார்கள். இதையறிந்த இலங்கை மன்னன் கஜபாகுவும் கண்ணகிக்கு விழா நடத்தினான். ஆயிரத்தெண்ணூறு ஆண்டுகளுக்கு முன்னால், இன்றைக்கு உலக ஆதிக்கம் செலுத்தும் மேனாட்டார் வன விலங்குகளை யொத்து மரங்கள்மீது வாழ்ந்திருந்த காலத்தில், தமிழ் மக்களின் வாழ்க்கை எல்லாத் துறைகளிலும் எவ்வளவு மேம்பாடு அடைந்திருந்தது என்பதைச் சிலப்பதிகாரம் நமக்கு நன்கு உணர்த்துகிறது. இசைக் கலையிலும் நாட்டியக் கலையிலும் பழந் தமிழர்கள் எவ்வளவு வியக்கத் தக்க முன்னேற்றம் அடைந்திருந்தார்கள் என்பதைச் சிலப்பதிகாரத்திலிருந்து நாம் நன்கறியலாம்.

தமிழ் மன்னர்களான சேர சோழ பாண்டிய மன்னர்கள் எவ்வளவு சீரும் சிறப்புமாக, அறநெறி வழுவாமல், மக்களின் நலத்துக்காகவே அரசியலை நடத்தி வந்தார்கள் என்பதையும் சிலப்பதிகார காவியத்திலிருந்து அறிகிறோம். "ஒரு விதி விலக்கானது பொது விதியை நிரூபித்துக் காட்டும்" என்பார்கள். பொய் சொல்லாப் புனிதராகிய தர்மபுத்திரரை ஒரு பொய் சொல்ல வைத்து அதன் மூலம் அவருடைய பெருமையை மகாபாரதம் விளங்க வைக்கிறது. அது போலவே கோவலன் விஷயத்தில் பாண்டிய மன்னன் ஆராய்ந்து பாராமல் அநீதி செய்து விட்டு, பிறகு அதை எண்ணித் தன் இன்னுயிரையே தியாகம் செய்தான் என்பது, மூன்று குலத் தமிழ் மன்னர்களின் நீதி உணர்ச்சிக்கு இணையில்லா எடுத்துக்காட்டு ஆகிறது.

"எல்லாச் சமயங்களும் இறைவனை எய்தும் வழிகளே!" என்பதைப் பழந் தமிழர்கள் நன்கு உணர்ந்திருந்தார்கள். அவ்வப்போது ஆவேசங் கொண்டவர்கள் சில சமயப் பூசல்களில் ஈடுபட்டார்களெனினும், பொதுவாகச் சகிப்புத் தன்மை தமிழ்நாட்டில் குடி கொண்டிருந்தது. சைவம், வைணவம், புத்தம், சமணம் ஆகிய நாலு மதங்களும் தமிழகத்தில் தழைத்தோங்கின. சிறப்பாக, சிவகுமாரனாகிய வேலனும் திருமாலின் அவதாரமாகிய கண்ணனும் பழந்தமிழர்களின் உள்ளக் கோயிலில் நிலை பெற்றிருந்தார்கள். தமிழ்நாட்டை வளப்படுத்திய பொன்னி நதியையும், தமிழரின் பண்பாட்டை வளப்படுத்திய வேலனையும் கண்ணனையும் பாடும்போது சிலப்பதிகாரக் கவிதை உச்சநிலையை அடைகிறது.

சென்னையில் சிலப்பதிகார மகாநாடு நடந்ததையும் பூம்புகாரில் சிலப்பதிகார விழா நடக்கப் போவதையும் முன்னிட்டு, இந்தக் "கல்கி" இதழ் அட்டையிலும் சிலப்பதிகாரக் காட்சியை வெளியிட்டிருக்கிறோம். கோவலனும் மாதவியும் கடற்கரையில் யாழ்க்கருவியை வாசித்துக் கொண்டு இசைப் பாடல்களைப் பாடி மகிழும் காட்சி பின்னணியில் விளங்குகிறது. பத்தினித் தெய்வமாகிய கண்ணகியின் உக்கிரமான முகத்தை முழுமையும் காட்டினால் நேயர்கள் தாங்கமாட்டார்கள் என்று கருதி, சித்திரக்காரர் ஒரு பாதி முகத்தை மட்டும் தீட்டியிருக்கிறார்!

கற்பரசி கண்ணகி பிறந்த தமிழகம் என்றென்றும் வாழ்வதாக!





ஏப்ரல் 14ந் தேதியன்று

சென்னையிலும்
தமிழ் நாட்டில் எல்லா
முக்கிய நகரங்களிலும்
ஆரம்பமாகிறது

ஸ்ரீ ராஜ ராஜேஸ்வரி
பிலிம் கம்பெனி தயாரித்த



# சௌதாமினி

தமிழ்



கண்ணாம்பா-எம்.கே.ராதா
எஸ்.வரலக்ஷ்மி-ஏ.நாகேஸ்வரராவ்
டி.ஆர்.ராஜனி-டி.ஆர்.ராமச்சந்திரன்
நடித்தது...

டைரக்ஷன்:
கே.பி.நாகபூஷணம்

வசனம்......"உதயகுமார்"
சங்கீதம்...எஸ்.வி.வெங்கடராமன்





# பொன்னியின் செல்வன்

ஐம்பதாம் அத்தியாயம்

## பராந்தகர் ஆதுரசாலை

மறு நாள் காலையில் சூரிய பகவான் உதயமாகி உலகத்தை ஒளி மயமாகச் செய்து கொண்டிருந்தார். சூரியனுடைய செங் கிரணங்கள் பழையாறை அரண்மனைகளின் பொற் கலசங்களின் மீது விழுந்து தக தகா மயமாய்ச் செய்து கொண்டிருந்தன. குந்தவைப் பிராட்டியின் மாளிகை முன்றிலில் அம்பாரி வைத்து அலங்கரித்த மாபெரும் யானை ஒன்று வந்து நின்றது. குந்தவையும் வானதியும் மாளிகையின் உள்ளேயிருந்து வெளி வந்து மேடைப் படிகளின்மீது ஏறி யானையின்மேல் ஏறிக்கொண்டார்கள். படைவீடுகளுக்கு நடுவில் இருந்த பராந்தக சோழர் ஆதுர சாலையை நோக்கி யானை பூமி அதிரும்படி நடந்து சென்றது. யானைப்பாகன் அதனருகில் நடந்து அதன் நடை வேகத்தைக் குறைத்து அழைத்துச் சென்றான். யானையின் மணி ஓசையைக் கேட்டு நகர மாந்தர் தத்தம் வீடுகளுக்குள்ளேயிருந்து விரைந்து வெளி வந்து பார்த்தார்கள். பெண்ணரசிகள் இருவரையும் கண்டதும் அவர்கள் முகமலர்ந்து கைகூப்பி நின்று முகமன் செலுத்தினார்கள்.

மற்ற வீதிகளைக் கடந்து யானை படை வீடுகள் இருந்த நகரத்தின் பகுதியை அடைந்தது. அந்த வீதிகளின் தோற்றமே ஒரு தனி மாதிரியாகத்தான் இருந்தது. கொழுத்த சேவற் கோழிகள் ஒன்றையொன்று சண்டைக்காகத் தேடிக் கொண்டு சென்றன. வளைந்து சுருண்ட கொம்புகளையுடைய ஆட்டுக் கடாக்கள் "போருக்கு வருவோர் யாரேனும் உண்டோ?" என்ற பாவனையுடன் அங்கு மிங்கும் பார்த்துக் கொண்டு நின்றன. ரோஸம் மிகுந்த வேட்டை நாய்களைத் தோல் வாரினாலும் மணிக் கயிறுகளினாலும் வீட்டு வாசல் தூண்களில் பிணைத்திருந்தார்கள். சின்னஞ் சிறு பிள்ளைகள் கைகளில் மூங்கில் கழி பிடித்து ஒருவரோடொருவர் சிலம்பம் விளையாடிக் கொண்டிருந்தார்கள். சிலம்பக் கழிகள் மோதிக் கொண்ட போது 'சட சடா பட படா' என்ற ஓசைகள் எழுந்தன.

வீடுகளின் திண்ணைச் சுவர்களிலே காவிக் கட்டிகளினால் விதவிதமான சித்திரக் காட்சிகள் வரையப்பட்டிருந்தன. பெரும்பாலும் அவை முருகப் பெருமானுடைய லீலைகளையும், சோழ மன்னர்களின் வாழ்க்கை வரலாறுகளையும் சித்திரித்தன. அவற்றில் யுத்தக் காட்சிகளே அதிகமாயிருந்தன. முருகப் பெருமான் சூரபதுமாசுரனுடைய தலைகளை முளைக்க முளைக்க வெட்டித் தள்ளிய காட்சியும்,

கல்கி

துர்க்கா பரமேசுவரி மகிஷாசுரனை வதம் செய்த காட்சியும் மிகப் பயங்கரமாக எழுதப்பட்டிருந்தன. தென்னாறு, தஞ்சை, குடமூக்கு, அரிசிலாறு, திருப்புறம்பயம், வெள்ளூர், தக்கோலம், சேவூர் முதலிய போர்க்களங்களில் சோழ நாட்டு வீரர்கள் நிகழ்த்திய அற்புத பராக்கிரமச் செயல்கள் திண்ணைச் சுவர்களில் தத்ரூபமாகக் காட்சி அளித்தன.

இந்தப் படைவீட்டு வீதிகளில் இளவரசிகள் ஏறியிருந்த யானை வந்ததும் ஒரே அல்லோலகல்லோலமாயிற்று. சேவல்கள் இறகுகளைச் சடசட வென்று அடித்துக் கொண்டு பறந்து கூரைமீது உட்கார்ந்து கூவின. பிள்ளைகள் ஒருவரையொருவர் கூச்சலிட்டு அழைத்துக் கொண்டு ஓடினார்கள். அவரவர்களின் வீட்டுக் கதவுகளைத் தட்டி உள்ளேயிருந்தவர்களுக்குச் செய்தி அறிவித்தார்கள்.

படைவீட்டு வீதிகள் வழியாக யானை சென்றபோது வீட்டு வாசல்தோறும் பெண்களும் குழந்தைகளும் முதியோர்களும் நின்று "இளைய பிராட்டி குந்தவை தேவி வாழ்க!" "சுந்தர சோழரின் செல்வத் திருமகள் வாழ்க!" என்று வாழ்த்தி மகிழ்ந்தார்கள். அவர்களில் சிலர் யானையைத் தொடர்ந்து செல்லவும் ஆரம்பித்தார்கள். வரவர இக்கூட்டம் அதிகமாகி வந்தது. பலவித வாழ்த்தொலிகளின் மூலமாகத் தங்கள் மகிழ்ச்சியை அவர்கள் வெளியிட்டுக் கொண்டு வந்தார்கள்.

அப்படை வீடுகளில், இலங்கைக்குப் போர் புரியச் சென்றிருந்த வீரர்களின் பெண்டு பிள்ளைகளும் பெற்றோர்களும் அச்சமயம் வசித்து வந்தார்கள் என்பதை முன்னமே குறிப்பிட்டிருக்கிறோம். அவர்களுடைய நலத்துக்காக ஒரு மருத்துவ சாலையைக் குந்தவை தன் சொந்த நிலமான்யங்களின் வருமானத்தைக் கொண்டு ஸ்தாபித்திருந்தாள். சோழ குலத்தாரிடம் தம் முன்னோர்களைப் போற்றும் வழக்கம் சிறப்பாக இருந்து வந்தது. குந்தவையின் மூதாதைகளில் அவளுடைய பாட்டனாரின் தந்தையான மூதற் பராந்தக சக்கரவர்த்தி மிகப் பிரசித்தி பெற்றவர். அவருடைய பெயர் விளங்கும்படி குந்தவை தேவி இந்தப் 'பராந்தகர் ஆதுர சாலை'யை ஸ்தாபித்து நடத்தி வந்தாள். அடிக்கடி அந்த வைத்திய சாலைக்கு வரும் வியாஜத்தை வைத்துக் கொண்டு போர்வீரர்களின் குடும்பத்தாருடைய க்ஷேம லாபங்களைப் பற்றி அவள் விசாரிப்பது வழக்கம்.

ஆதுர சாலைக்கு அருகில் வந்து சேர்ந்ததும் யானை நின்றது. முன்னங் கால்களை முதலில் மடித்துப் பிறகு பின்னங் கால்களையும் மடித்து அது தரையில் படுத்துக் கொண்டது. பெண்ணரசிகள் இருவரும் யானை மேலிருந்து பூமியில் இறங்கினார்கள்.

யானை சிறிது நகர்ந்து அப்பால் சென்றதும் ஜனக் கூட்டம்,—முக்கியமாகப் பெண்கள் — குழந்தைகளின் கூட்டம், தேவிமார்களை நெருங்கிச் சூழ்ந்து கொண்டது.

"ஆதுர சாலை உங்களுக்கெல்லாம் உபயோகமாயிருக்கிறதல்லவா? வைத்தியர்கள் தினந்தோறும் வந்து தேவையானவர்களுக்கு மருந்து கொடுத்து வருகிறார்கள் அல்லவா?" என்று இளவரசி கேட்டாள்.

"ஆம், தாயே! ஆம்!" என்று பல குரல்கள் மறுமொழி கூறின.



"மூன்று மாதமாக இருமலினால் கஷ்டப்பட்டுக் கொண்டிருந்தேன். ஒரு வாரம் வைத்தியரிடம் மருந்து வாங்கிச் சாப்பிட்டதில் குணமாகி விட்டது!" என்றாள் ஒரு பெண்மணி.

"அம்மா! என் மகன் மரத்தின் மேல் ஏறி விழுந்து காலை ஒடித்துக் கொண்டான். வைத்தியர் கட்டுப் போட்டு விட்டுப் பதினைந்து நாள் மருந்து கொடுத்தார். சுகமாகிவிட்டது. இப்போது துள்ளி ஓடி விளையாடுகிறான். மறுபடி மரத்தின் மேல் ஏறவும் ஆரம்பித்து விட்டான்!" என்றாள் இன்னொரு ஸ்திரீ.

"என் தாயாருக்குக் கொஞ்ச காலமாகக் கண் மங்கலடைந்து வந்தது. ஒரு மாதம் இந்த ஆதுரசாலைக்கு வந்து மருந்து போட்டுக் கொண்டு வந்தாள். இப்போது கண் அவளுக்கு நன்றாய்த் தெரிகிறது!" என்றாள் இளம் பெண் ஒருத்தி.

"பார்த்தாயா, வானதி! நம் தமிழகத்தில் வாழ்ந்த முன்னோர்கள் எப்பேர்ப்பட்டவர்கள்? இன்ன வியாதியை இன்ன மூலிகையினால் தீர்க்கலாம் என்று அவர்கள் எப்படித்தான் கண்டு பிடித்தார்களோ தெரியவில்லை!" என்றாள் குந்தவைப் பிராட்டி.

"ஞானக்கண் கொண்டு பார்த்துத்தான் அவர்கள் இவ்வளவு அதிசயமான மருந்துகளைக் கண்டு பிடித்திருக்க வேண்டும். வேறு எப்படி முடியும்?" என்றாள் வானதி.

"எவ்வளவோ அதிசயமான மருந்துகளை அவர்கள் கண்டு பிடித்திருப்பது உண்மைதான். ஆனால் உன்னைப் போல் மனோ வியாதயினால் வருந்துகிறவர்களுக்கு மருந்து ஒன்றும் கண்டு பிடிக்கவில்லையே? என்ன செய்வது?"

"அக்கா! எனக்கு ஒரு மனோ வியாதியும் இல்லை. கருணை கூர்ந்து இவ்விதம் அடிக்கடி சொல்லாதிருங்கள்! என் தோழிகள் ஓயாது என்னைப் பரிகசித்து என் பிராணனை வாங்குகிறார்கள்!"

"நன்றாக வேண்டுமடி உனக்கு! உலகத்தில் ஒரு கவலையும் இல்லாமல் வாழ்ந்து வந்த என் தம்பியின் மனம் பேதலிக்கும்படி செய்து விட்டாய் அல்லவா? ஒவ்வொரு தடவையும் இலங்கையிலிருந்து ஆள் வரும்போதெல்லாம் உன் உடம்பு எப்படியிருக்கிறது என்று கேட்டு அனுப்புகிறானே!" என்றாள் இளைய பிராட்டி.

இதற்குள் "வைத்தியருக்கு வழி விடுங்கள்! வைத்தியருக்கு வழி விடுங்கள்!" என்று கோஷம் கேட்டது. அங்கே சூழ்ந்து நின்றவர்களைக் காவலர்கள் விலக்கினார்கள். ஆதுரசாலையின் வயது முதிர்ந்த தலைமை வைத்தியர் வந்து இளவரசிகளை வரவேற்று உபசரித்தார்.

"வைத்தியரே! கோடிக்கரைப் பக்கத்துக் காடுகளில் சில உயர்ந்த மூலிகைகள் இருக்கின்றனவென்று சொன்னீர் அல்லவா? அங்கே போய் வருவதற்காக ஒரு வாலிப வீரரை அனுப்பினேனே? அவர் வந்தாரா?" என்று குந்தவை கேட்டாள்.

"ஆம், தாயே! அந்தக் குடிகையான இளம் பிள்ளை வந்தான். ஈசான சிவ பட்டர் அழைத்துக்கொண்டு வந்தார். அவனுடன் என் மகன் ஒருவனை அனுப்பி வைக்கிறேன். ' என் மகன் கோடிக்கரையிலிருந்து திரும்பி வந்து விடுவான். தாங்கள் அனுப்பிய வீரன் இலங்கைத் தீவுக்கும் போய் வருவதாகச் சொல்கிறான்......"





"இலங்கையி லிருந்து கூட வா மூலிகை கொண்டு வர வேண்டும்!" என்று வானதி கேட்டாள்.

"ஆம், தாயே! லக்ஷ்மணருடைய உயிரைக் காப்பாற்றுவதற்காக அனுமார் சஞ்சீவி பர்வதம் கொண்டுவந்த போது கோடிக்கரை வழியாகத்தான் கடலைத் தாண்டினாராம். அப்போது சஞ்சீவி மலையிலிருந்து சில மூலிகைகள் கோடிக்கரைக் காட்டில் விழுந்தபடியால்தான் அங்கே இன்றைக்கும் நல்ல மூலிகைகள் கிடைக்கின்றன. இலங்கையில் சஞ்சீவி பர்வதமே இருந்தபடியால் அங்கே இன்னும் அபூர்வமான மூலிகைகள் கிடைக்கும் அல்லவா? நான் எதிர்பார்க்கும் மூலிகைகள் மட்டும் கிடைத்து விட்டால், சக்கரவர்த்தியின் நோயை நானே கட்டாயம் குணப்படுத்தி விடுவேன்......"

"கடவுள் கிருபையினால் அப்படியே ஆகட்டும். இப்போது அந்த வாலிபர்கள் இருவரும் எங்கே?"

"உள்ளே இருக்கிறார்கள், அம்மா! பிரயாணத்துக்கு ஆயத்தமாகத் தங்களிடம் விடை பெற்றுக் கொண்டு புறப்படக் காத்திருக்கிறார்கள்!"

தலைமை மருத்துவர் அழைத்துச் செல்ல இளவரசிகள் இருவரும் ஆதுர சாலைக்குள் சென்றார்கள். அங்கே தாழ்வாரங்களில் மருந்து வாங்கிக் கொண்டு வந்தவர்களையும் மருந்துக்காகக் காத்திருப்பவர்களையும் பார்த்துக் கொண்டு நடந்தார்கள். அவர்கள் அனைவரும் குந்தவைப் பிராட்டியைப் பார்த்ததும் அகமும் முகமும் மலர்ந்து இவ்வளவு நல்ல மருத்துவசாலையைத் தங்களுக்கு ஏற்படுத்திக் கொடுத்ததற்காக இளவரசியை வாழ்த்தினார்கள்.

தலைமை மருத்துவரின் அறையில் இருவர் காத்திருந்தனர். அவர்களில் நம் வந்தியத்தேவன் புதிய முறையில் உடை அணிந்திருந்ததைப் பார்த்து இளையபிராட்டி புன்னகை பூத்தாள். வானதிக்கும் அவ்வீரனை ஒருவாறு அடையாளம் தெரிந்து விட்டது. குந்தவையின் காதோடு, "அக்கா! குடந்தை ஜோதிடரின் வீட்டில் பார்த்தவர் மாதிரி இருக்கிறதே!" என்றாள்.

"அவர் மாதிரிதான் எனக்கும் தோன்றுகிறது. ஜோதிடரைப் பார்த்த பிறகு வைத்தியரிடம் வந்திருக்கிறார். உன் மாதிரியே இவருக்கும் ஏதாவது சித்தக் கோளாறு போலிருக்கிறது!" என்று சொல்லி விட்டு, வந்தியத்தேவனைப் பார்த்து, "ஏன், ஐயா! சக்கரவர்த்தியின் உடல் நலத்துக்காக மூலிகை கொண்டு வருவதற்கு இலங்கைக்குப் போக ஒப்புக் கொண்டவர் நீர்தானா?" என்று கேட்டாள்.

வந்தியத்தேவனுடைய கண்களும் கண்ணிமைகளும் வேறு ஏதோ இரகசிய பாஷையில் பேசின. அவன் வாயினால், "ஆம், இளவரசி! நான் தான் இலங்கைக்குப் போகிறேன். ஒருவேளை அங்கு இளவரசரைப் பார்த்தாலும் பார்ப்பேன். அவருக்கு ஏதாவது செய்தி சொல்ல வேண்டுமா?" என்று கேட்டான்.

"பார்த்தால், அவசியம் இந்தச் செய்தியைச் சொல்லுவீர். கொடும்பாளூர் இளவரசி வானதிக்கு உடம்பு சரியாகவே இல்லை. அடிக்கடி நினைவு இழந்து மூர்ச்சை போட்டு விழுகிறாள். இளவரசியைச் சுயப் பிரக்ஞையோடு பார்க்க வேண்டுமானால் உடனே புறப்பட்டு வரவேண்டும் என்பதாகத் தெரிவிக்க வேண்டும்" என்றாள் இளையபிராட்டி.

"அப்படியே தெரிவிக்கிறேன், அம்மணி!" என்று கூறி வந்தியத்தேவன் வானதியை நோக்கினான்.

குந்தவையின் வார்த்தைகளைக் கேட்டதும் உண்டான நாணத்தினால் வானதியின் இனிய முகம் இன்னும் பன்மடங்கு அழகு பெற்றுப் பொலிந்தது. பொங்கி வந்த நாணத்தையும் கூச்சத்தையும் சமாளித்துக் கொண்டு வானதி தட்டுத் தடுமாறி, "ஐயா! அப்படியொன்றும் தாங்கள் சொல்லிவிடவேண்டாம். ரொம்பவும் தங்களைக் கேட்டுக் கொள்கிறேன். கொடும்பாளூர் வானதி இளைய பிராட்டியின் போஷணையில் தினம் நாலு வேளை உண்டு உடுத்துச் சுகமாக இருப்பதாகத் தெரியப்படுத்துங்கள்" என்றாள்.



"அப்படியே தெரிவித்து விடுகிறேன், அம்மணி!" என்றான் வந்தியத்தேவன்.

"அழகாயிருக்கிறது! நான் கூறியதையும் 'அப்படியே தெரிவிக்கிறேன்' என்றீர். இவன் சொன்னதையும் 'அப்படியே தெரிவிக்கிறேன்' என்று ஒப்புக் கொள்கிறீரே? இரண்டில் ஏதாவது ஒன்றுதானே உண்மையாக இருக்க முடியும்?"

"அதனால் என்ன, அம்மணி! வாதி கூறியதையும் பிரதிவாதி சொன்னதையும் அப்படி அப்படியே நான் சொல்லி விடுகிறேன். ஏது உண்மை, எது இல்லை என்பதை இளவரசரே நீதிபதியாக இருந்து தீர்மானித்துக் கொள்ளட்டும்!" என்று சொன்னான் வந்தியத்தேவன்.

"ஆனால் ஒருவர் சொன்னதை இன்னொருவர் சொன்னதாக மட்டும் மாற்றிச் சொல்லிவிட வேண்டாம்! உமக்குப் புண்ணியம் உண்டு!" என்றாள் வானதி

குந்தவை இந்தப் பேச்சை அத்துடன் நிறுத்த விரும்பி, "வைத்தியரே! அரண்மனைத் திருமந்திர அதிகாரியிடமிருந்து இவர்களுக்குக் கொடுத்து அனுப்ப ஓலை கிடைத்ததா?" என்று கேட்டாள்.

"கிடைத்தது, தாயே! 'சக்கரவர்த்திக்கு வைத்தியம் செய்வதற்காக இவர்கள் மூலிகை கொண்டுவரப் போவதால் வழியிலுள்ள அரசாங்க அதிகாரிகள் எல்லாரும் இவர்கள் கோரும் உதவி செய்ய வேண்டும்' என்று பொதுவாக ஓர் ஓலையும், கோடிக் கரைக் கலங்கரை விளக்கக் காவலருக்குத் தனியாக ஓர் ஓலையும் கிடைத்தன. இவர்களிடம் கொடுத்து விட்டேன்!" என்றார் வைத்தியர்.




"அப்படியானால் ஏன் தாமதம்? உடனே புறப்பட வேண்டியதுதானே" என்றாள் இளைய பிராட்டி குந்தவை.

"ஆம்; புறப்பட வேண்டியது தான்!" என்றான் வந்தியத்தேவன்.

ஆனால் உடனே புறப்பட்டுவிடுங் காரியம் அவ்வளவு சுலபமாக இல்லை.

மருத்துவ சாலையிலிருந்து அவர்கள் வெளியேறி வெளியில் வந்தார்கள். அரசகுமாரிகளை ஏற்றிச் செல்ல அம்பாரி யானை காத்திருந்தது. வந்தியத்தேவனையும் அவனுடைய துணைவனையும் ஏற்றிக்கொண்டு காற்றாகப் பறந்து செல்லுவதற்கு அரண்மனைக் குதிரைகள் இரண்டு துடி துடித்துக் கொண்டு நின்றன.

ஆனால் வந்தியத்தேவனுக்குத் திடீர் திடீர் என்று ஏதாவது சந்தேகம் ஏற்பட்டுக் கொண்டிருந்தது. குந்தவைக்கும் புதிது புதிதாக எச்சரிக்கை செய்வதற்கு ஏதேனும் விஷயம் தோன்றிக் கொண்டிருந்தது. போகும் வழியில் அவர்களுக்கு ஏற்படக்கூடிய அபாயங்களைப் பற்றிக் குந்தவை

முக்கியமாக எச்சரிக்கை செய்தாள்.

அரச குமாரிகள் அம்பாரி யானை மீது ஏறிக் கொண்டார்கள்.

பிறகு வந்தியத்தேவனும் அவனுடைய துணைவனும் குதிரைகள்மீது ஏறினார்கள்.

யானை புறப்படுகிற வழியாகத் தோன்றவில்லை. நெடுந் தூரம் பிரயாணம் போகிறவர்கள்தான் முதலில் புறப்பட வேண்டும் என்று குந்தவை குறிப்பினால் தெரியப்படுத்தினாள்.

வந்தியத் தேவன் மனமின்றித் தயக்கத்துடன் குதிரையைத் திருப்பினான். இன்னும் ஒருமுறை ஆவல் ததும்பிய கண்களுடன் இளவரசியைத் திரும்பிப் பார்த்தான். பிறகு குதிரையின் பேரில் கோபங் கொண்டவன் போல் சுளீர் என்று ஒரு அடி கொடுத்தான். ரோஸம் மிகுந்த அக் குதிரை நாலு கால் பாய்ச்சலில் பிய்த்துக் கொண்டு பறந்து சென்றது. அவனைத் தொடர்ந்து போவதற்கு வைத்தியரின் புதல்வன் திணற வேண்டி யிருந்தது.



னிடம் ஏன் இவ்வளவு சிரத்தை கொள்கிறது? இவன் ஏற்றுக் கொண்ட காரியத்தை வெற்றியுடன் முடித்துக் கொண்டு பத்திரமாய்த் திரும்ப வேண்டுமே என்று ஏன் இவ்வளவு கவலைப் படுகிறது?......

"அக்கா! என்ன யோசிக்கிறீர்கள்?" என்ற வானதியின் குரல் குந்தவையை இந்த உலகத்துக்குக் கொண்டு வந்தது.

"ஒன்றுமில்லை வானதி! அந்த வாலிபனுடைய அகம்பாவ சுபாவத்தைப் பற்றி யோசித்துக் கொண்டிருந்தேன். அவனிடம் என் தம்பிக்கு ஏன் செய்தி சொல்லி அனுப்பினோம் என்று இப்போது தோன்றுகிறது......"

"ஆம், அக்கா! அவன் ரொம்பப் பொல்லாதவன்தான்! பெரிய கொள்ளைக்காரன் என்று கூடச் சொல்லத் தோன்றுகிறது......"

"அது என்ன? கொள்ளைக்காரன் என்று எதனால் சொல்கிறாய்!"

"சாதாரண கொள்ளைக்காரர்கள் பொன் வெள்ளி முதலிய பயனற்ற பொருள்களைக் கொள்ளை

யானை திரும்பிச்செல்லத் தொடங்கிய பிறகு குந்தவை சிந்தனையில் ஆழ்ந்தாள். இந்த மனதுதான் என்ன விசித்திரமான இயல்பை உடையது? மன்னாதி மன்னர்களையும் வீராதி வீரர்களையும் நிராகரித்த இந்த மனது வழிப் போக்கனாக வந்த இவ் வாலிப

யடிப்பார்கள். இந்த வாலிபன் சோழ வள நாட்டின் குல தெய்வத்தையே கொள்ளை யடித்துக் கொண்டு போய் விடுவான் என்று எனக்குப் பயமாயிருக்கிறது. தாங்கள் அதற்கு இடங் கொடுக்க மாட்டீர்கள் அல்லவா?" என்று வானதி கூறினாள்.

"அடி கள்ளி! உன்னைப்போல் என்னையும் நினைத்து விட்டாயா! அப்படியெல்லாம் ஒருநாளும் நடவாது!" என்றாள் குந்தவை.

* * *

யானை திரும்பிச் சிறிது தூரம் சென்றபோது வீதியில் ஓரிடத்தில் பெண்கள் பலர் கூட்டம் கூடி நிற்பதை அரசிளங்குமரிகள் பார்த்தார்கள். யானையை நிறுத்தச் செய்து விட்டு, "ஏன் கூட்டம் கூடி நிற்கிறீர்கள்? ஏதாவது சொல்லவேண்டுமா?" என்று இளைய பிராட்டி குந்தவை கேட்டாள்.

அந்தப் பெண்களில் ஒருத்தி முன் வந்து, "தாயே! இலங்கையில் உள்ள எங்கள் புருஷர்களைப் பற்றி ஒரு செய்தியும் இல்லையே? அவர்களுக்கு இங்கிருந்து அரிசி அனுப்பக் கூடாதென்று தஞ்சாவூர்க்காரர்கள் தடுத்து விட்டார்களாமே? வயிற்றுக்குச் சாப்பாடு இல்லாமல் எப்படி, அம்மா, அவர்கள் சண்டை போடமுடியும்?" என்று கேட்டாள்.

"அதற்காக நீங்கள் கவலைப்பட வேண்டாம். மாமல்லபுரம் துறைமுகத்திலிருந்து அவர்களுக்கு வேண்டிய தானியம் போய்க் கொண்டிருக்கிறது. தஞ்சாவூர்க்காரர்கள் என்ன செய்தாலும், உங்கள் இளவரசர் சும்மா விட்டு விடுவாரா? சோழ நாட்டு மகா வீரர்கள் பட்டினி கிடக்கும்படி பார்த்துக் கொண்டிருந்து விடுவாரா!" என்றாள் இளைய பிராட்டி.

வேறொரு சந்தர்ப்பமாயிருந்தால், குந்தவை அங்கேயே இறங்கி அந்தப் பெண்களுக்கு மேலும் சமாதானம் சொல்லியிருப்பாள். இப்போது அவளுடைய மனம் வேறு விதமான சஞ்சலத்துக்கு உள்ளாகியிருந்தபடியால் தனிமையை விரும்பினாள். யானை அரண்மனையை நோக்கிச் சென்றது.

## ஐம்பத்தோரும் அத்தியாயம்

# மாமல்லபுரம்

நேயர்கள் ஏற்கனவே நன்கு அறிந்துள்ள மாமல்லபுரத்துக்கு இப்போது அவர்களை அழைத்துச் செல்ல விரும்புகிறோம்.

மகேந்திர பல்லவரும் மாமல்ல நரசிம்மரும் இத்துறைமுகப் பட்டணத்தை அற்புத சிற்ப வேலைகளின் மூலம் ஒரு சொப்பனபுரியாகச் செய்த காலத்திற்குப் பிறகு இப்போது முந்நூறு ஆண்டுகளுக்கு மேலேயே ஆகி விட்டன.

நகரத்தின் தோற்றம் ஓரளவு மங்கியிருக்கிறது. மாறுதல் நம் மனதுக்கு மகிழ்ச்சி தரவில்லை.

மாட மாளிகைகள் இடிந்து விழுந்து பாழடைந்து கிடக்கின்றன. வீதிகளிலும் துறைமுகத்திலும் முன்போல் அவ்வளவு ஜனக்கூட்டம் இல்லை. வர்த்தகப் பெருக்கமும் அவ்வளவாக இல்லை. பெரியபெரிய பண்டகசாலைகள் இல்லை. வீதிகளிலெல்லாம் ஏற்றுமதி இறக்குமதிப் பண்டங்கள் மலை மலையாகக் குவிந்திருக்கவில்லை.

கடல் பூமிக்குள் புகுந்து ஆழம் மிகுந்த கால்வாயாக அமைந்து கப்பல்கள் வந்து பத்திரமாய் நிற்பதற்குரிய இயற்கைத் துறைமுகமாக இருந்ததை முன்னர் பார்த்தோம். இப்போது அந்தக் கால்வாயில் மணல் அடித்து அடித்துத் தூர்ந்து போய் ஆழம் வெகுவாகக் குறைந்து போயிருக்கிறது. ஆழமற்ற அக் கடற் கழியில் சிறிய படகுகளும் ஓடங்களும்தான் வரக்கூடும். நாவாய்களும் மரக்கலங்களும் சற்றுத் தூரத்தில் கடலிலேதான் நிற்க வேண்டும். படகுகளில் வர்த்தகப் பொருள்களை ஏற்றிச் சென்று அந்த மரக் கலங்களில் சேர்ப்பிக்க வேண்டும்.

மேலே கூறிய இடைக் காலத்தில் மாமல்லபுரம் சில புதிய சிறப்புக்களையும் அடைந்திருந்ததைக் குறிப்பிட வேண்டும். முக்கியமாக கடற்கரையோரத்தில் விளங்கிய அழகிய கற்கோயில் நம் கண்களையும் கருத்தையும் கவர்கின்றது. அது மகேந்திரன்—மாமல்லன் காலத்தில் அமைக்கப்பட்ட குன்றுகளைக் குடைந்தெடுத்த கோவில்களைப் போன்றதல்ல. குன்றுகளிலிருந்து கற்களைப் பெயர்த்துக்

கொண்டுவந்து கட்டப்பட்ட கோயில். சமுத்திர ராஜனுடைய தலையில் சூட்டப்பட்ட அழகிய மணி மகுடத்தைப் போல் விளங்குகிறது. அடடா! அந்தக் கோயில் அமைப்பின் அழகை என்னவென்று சொல்வது?

இதைத் தவிர நகரத்தின் நடுவே மூவுலகும் அளந்த பெருமாள் சயனித்திருக்கும் விண்ணகரக் கோயில் ஒன்றும் காட்சி அளிக்கிறது. சைவத்தையும் வைஷ்ணவத்தையும் இரு கண்களைப் போல எண்ணிப் போற்றி வளர்த்த பரமேசுவர பல்லவன் திருப்பணி செய்த விண்ணகரம் அது. திருமங்கையாழ்வார் இந்தக் கோயிலுக்கு வந்து தலசயனப் பெருமானைத் தரிசித்துப் பக்தி வெள்ளம் பெருக்கெடுத்து ஓடும் தமிழ்ப் பாடல்களைப் பாடியிருக்கிறார். அவருடைய காலத்திலேகூடப் பல்லவ சாம்ராஜ்யம் பெருகி வளர்ந்த சிறப்புடன் விளங்கியது என்பதையும் மாமல்லபுரம் செல்வம் கொழிக்கும் துறைமுகமாக விளங்கியது என்பதையும் பின்வரும் பாசுரத்தின் மூலம் நன்கு அறியலாம்:—

"புலன்கொள் நீத்குவை யொடு
புழைக்கை மா களிற்றினமும்
நலங்கொள் நவமணிக் குவையும்
சுமந்தெங்கும் நான் றொசிந்து
கலங்கள் இயங்கும் மல்லைக்
கடல் மல்லைத் தலசயனம்
வலங்கொள் மனத்தாரவரை
வலங்கொள் என் மட நெஞ்சே!"

திருமங்கையாழ்வாரின் காலத்துக்குப் பிற்பட்ட நூறாண்டு காலத்தில் பல்லவ சாம்ராஜ்ய சூரியன் அஸ்தமித்துவிட்டது. 'கல்வியில் இணையிலாத காஞ்சி' மாநகரின் சிறப்பும் குறைந்து விட்டது. 'கலங்கள் இயங்கும் கடல் மல்லை'யின் வர்த்தக வளமும் குன்றி வந்தது.

ஆனால் தமிழகத்துக்கு அழியாப் புகழ் அளிப்பதற்கென்று அமைந்த அந்த அமர நகரத்தின் அற்புத சிற்பக் கலைகளுக்கு மட்டும் எந்தவிதக் குறைவும் நேரவில்லை. பாறைச் சுவர்களில் செதுக்கப்பட்ட சித்திர விசித்திரமான சிற்பங்களும் குன்றுகளைக் குடைந்து எடுத்து அமைத்த விமான ரதங்களும் மூந்நூறு ஆண்டுகளுக்கு முன்னால் அவற்றை அமைத்த காலத்தில் விளங்கியது போலவே இன்றைக்கும் புத்தப் புதியனவாக விளங்கின. பண்டங்களை ஏற்றுமதி செய்வதற்காக வந்த வர்த்தகர்களின் கூட்டத்தைக் காட்டிலும் சிற்பச் செல்வங்களைக் கண்டு களித்துப் போவதற்காக வந்த ஜனக் கூட்டம் அதிகமாயிருந்தது.

* * *

மாமல்லபுரத்து வீதிகளின் வழியாக இரட்டைக் குதிரைகள் பூட்டிய அழகிய விமான ரதம் ஒன்று சென்றது. குதிரைகளின் அலங்காரங்களும், ரதத்தின் வேலைப்பாடுகளும், பொன் தகடு வேய்ந்து மாலை வெய்யிலில் மற்றொரு சூரியனைப் போல் பிரகாசித்த ரதத்தின் மேல்விதானமும் அதில் இருந்தவர்கள் அரசகுலத்தினரா யிருக்க வேண்டும் என்பதை உணர்த்தின.

ஆம்; அந்தப் பொன் ரதத்தின் விசாலமான உட்புறத்தில் அரசகுலத்தினர் மூவர் அமர்ந்திருந்தார்கள். அவர்களில் ஒருவன் தான், வீராதி வீரனும் சுந்தர சோழரின் மூத்த குமாரனுமான ஆதித்த கரிகாலன். மிக இளம்பிராயத்திலேயே இவன் போர்க்களத்துக்குச் சென்று செயற்கரும் வீரச் செயல்கள் புரிந்தான். மதுரை வீர பாண்டியனை இறுதிப் போரில் கொன்று "வீர பாண்டியன் தலை கொண்ட கோப்பர கேசரி" என்று பட்டப்பெயர் பெற்றான். வீரபாண்டியன் வீர சொர்க்கம் அடைந்து பாண்டிய நாடு சோழ சாம்ராஜ்யத்தின் கீழ் வந்த உடனடியாகத்தான் சுந்தர சோழர் நோய்வாய்ப்பட்டார். ஆதித்த கரிகாலனே அடுத்த பட்டத்துக்கு உரியவன் என்பதை ஐயமற நிலைநாட்ட அவனுக்கு யுவராஜ்ய பட்டாபிஷேகம் செய்வித்தார். அது முதல் கல்வெட்டுக்களில் தன் பெயரைப் பொறித்துச் சாஸனம் அளிக்கும் உரிமையும் ஆதித்த கரிகாலன் பெற்றான்.

பின்னர், தொண்டை மண்டலத்தை இரட்ட மண்டலத்துக் கன்னர தேவனுடைய ஆதிக்கத்திலிருந்து முழுதும் விடுவிக்கும் பொருட்டு ஆதித்த கரிகாலன் வடநாட்டுக்குப் பிரயாணமானான். அங்கேயும் பல போர்க்களங்களில் செயற்கரும் வீரச் செயல்களைப் புரிந்தான். இரட்டை

மண்டலத்துப் படைகளை வடபெண்ணைக்கு வடக்கே துரத்தியடித்தான். மேலும் வடதிசையில் படையெடுத்துச் செல்வதற்குப் படை பலத்தைப் பெருக்கிக் கொள்ளுதல் அவசியமாயிற்று. ஆகவின் காஞ்சியில் வந்து தங்கிப் படை திரட்டவும் மற்றும் படையெடுப்புக்கு அவசியமான ஆயுத தளவாட சாமக்கிரியைகளைத் திரட்டவும் தொடங்கினான். இந்த நிலையில் பழுவேட்டரையர்கள் அவனுடைய முயற்சிக்குத் தடங்கல் செய்யத் தொடங்கினார்கள். இலங்கைப் போர் முடிந்த பிறகுதான் வடநாட்டுப் படையெடுப்புத் தொடங்கலாம் என்று சொன்னார்கள். இன்னும் பலவிதமான வதந்திகளும் காற்றிலே மிதந்து வரத் தொடங்கின. இலங்கையில் போர் செய்யச் சென்றுள்ள படைக்குச் சோழ நாட்டிலிருந்து வேண்டிய உணவுப் பொருள் போகவில்லையென்று தெரிந்தது. இதனாலெல்லாம் ஆதித்த கரிகாலனுடைய வீர உள்ளம் துடித்துக் கொந்தளித்துக் கொண்டிருந்தது.

நமது கதை நடந்த காலத்துக்கு முன்னும் பின்னும் சுமார் மூந்நூறு ஆண்டு காலத்தில் தமிழ் அன்னையின் திருவயிற்றில் இதிகாச காவியங்களில் நாம் படிக்கும் மகா வீரர்களை யொத்த வீரப் புதல்வர்கள் தோன்றிக் கொண்டிருந்தார்கள். வீமனையும் அர்ச்சுனனையும் பீஷ்மரையும் துரோணரையும் கடோத்கஜனையும் அபிமன்யுவையும் ஒத்த வீரர்கள் தமிழகத்தில் அவதரித்தார்கள். உலகம் வியக்கும்படியான தீரச் செயல்களைப் புரிந்தார்கள். போரில் அடைந்த ஒவ்வொரு வெற்றியும் இவர்களுடைய தோள்களுக்கு மேலும் வலி அளித்தன. வயது முதிர்ந்த கிழவர்கள் மலையைப் பெயர்த்தெடுக்கும் வலிமை பெற்றிருந்தார்கள். பிராயம் ஆகாத இளம் வாலிபர்கள் காற்றில் ஏறிச் சென்று வான முகட்டை அடைந்து விண் மீன்களை உதிர்க்கும் ஆற்றல் பெற்றிருந்தார்கள்.

இப்படிப்பட்ட வீரர்கள் இருவர் அச்சமயம் ஆதித்த கரிகாலன் ஏறிச் சென்ற ரதத்தில் அவனுடன் சம ஆசனத்தில் உட்கார்ந்திருந்தார்கள்.

இவர்களில் ஒருவர் திருக்கோவலூர் மலையமான். இவர் ஆண்ட மலையமானாடு வழக்கத்தில் பெயர் சுருங்கி 'மலாடு' என்றும் 'மிலாடு' என்றும் வழங்கியது. ஆகையால் இவருக்கு 'மிலாடுடையார்' என்ற பட்டப் பெயர் ஏற்பட்டிருந்தது.

சுந்தர சோழ சக்கரவர்த்தியின் இரண்டாவது பத்தினியாகிய வானமாதேவி இவருடைய செல்வத் திருமகள் தான். எனவே, ஆதித்த கரிகாலனுடைய பாட்டனார் இவர். முதிர்ந்த பிராயத்திலும் நிறைந்த அறிவிலும் இவர் கௌரவர்களின் பாட்டனாரான பீஷ்மரை ஒத்திருந்தார். ஆதித்த கரிகாலன் இவரிடம் பெரும் பக்தி வைத்திருந்த போதிலும் இவருடைய புத்திமதி சில சமயம் அந்த வீர இளவரசனின் பொறுமையைச் சோதித்தது.

ரதத்தில் இருந்தவர்களில் இன்னொருவன் பார்த்திபேந்திரன். இவன் பழைய பல்லவர் குலத்திலிருந்து கிளை வழி ஒன்றில் தோன்றியவன். ஆதித்த கரிகாலனை விட வயதில் சிறிது மூத்தவன். அரசுரிமை அற்றவனாதலால் போர்க்களத்தில் தன் ஆற்றலைக் காட்டி வீரப் புகழை நிலைநாட்ட விரும்பினான். ஆதித்த கரிகாலனைச் சென்றடைந்தான். வீரபாண்டியனோடு நடத்திய போரில் ஆதித்த கரிகாலனுக்கு வலது கையைப் போல இருந்து உதவி புரிந்தான். இதனால் ஆதித்த கரிகாலனுடைய அந்தரங்க நட்புக்கு உரியவனானான். வீரபாண்டியன் விழுந்த நாளிலிருந்து இருவரும் இணைபிரியாத் தோழர்கள் ஆனார்கள்.

இந்த மூவரும் ரதத்தில் சென்ற போது தஞ்சாவூரிலிருந்து பராபரியாக வந்த செய்திகளைப் பற்றியே பேசிக் கொண்டிருந்தார்கள்.

"இந்தப் பழுவேட்டரையர்களின் அகம்பாவத்தை இனிமேல் என்னால் ஒரு கணமும் சகித்துக் கொண்டிருக்க முடியாது. நாளுக்கு நாள் அவர்கள் வரம்பு கடந்து போகிறார்கள். நான் அனுப்பிய தூதன் பேரில் 'ஒற்றன்' என்ற குற்றம் சுமத்துவதற்கு இவர்களுக்கு எத்தனை அகந்தை இருக்க வேண்டும்? அவனைப் பிடித்துக் கொடுப்பவர்களுக்கு ஆயிரம் பொன் வெகுமதி கொடுப்பதாகப் பறையறைவித்தார்களாமே? இதையெல்லாம் நான் எப்படிப் பொறுக்க முடியும்? என் உறையிலுள்ள வாள் அவமானத்

னுல் குன்றிப் போயிருக்கிறது. நீங்களோ பொறுமை உபதேசம் செய்கிறீர்கள்!" என்ருன் ஆதித்த கரிகாலன்.

"பொறுமை உபதேசம் நான் செய்யவில்லை. ஆனல் இந்தமாதிரி முக்கியமான காரியத்துக்கு வந்தியத்தேவனை அனுப்ப வேண்டாம் என்று மட்டும் அப்போதே சொன்னேன். அந்தப் பதட்டக்காரன் காரியத்தைக் கெடுத்து விடுவான் என்று எனக்குத் தெரியும்! வாளை வீசவும் வேலை எறியவும் மட்டும் தெரிந்திருந்தால் போதுமா? இராஜ காரியமாகத் தூது செல்கிறவனுக்குப் புத்திக் கூர்மை இருக்க வேண்டும்......" என்று கூறினுன் பார்த்திபேந்திரன்.

இளவரசன் கரிகாலன் வந்தியத்தேவனிடம் காட்டிய அபிமானம் பார்த்திபேந்திரனுக்குப் பிடிப்பதில்லை. எப்போதும் அவனைப் பற்றி ஏதாவது குறை சொல்லிக் கொண்டிருப்பான். அவன் செய்யும் எந்தக் காரியத்திலும் குற்றம் கண்டு பிடிப்பான். ஆகையால் இந்தச் சந்தர்ப்பத்திலும் அவ்வாறு குற்றம் சொன்னுன்.

"ஆரம்பித்து விட்டாயா, உன் கதையை? வந்தியத்தேவன் பேரில் ஏதாவது சொல்லிக் கொண்டிராவிட்டால் உனக்குப் பொழுது போகாது. அவனுக்குப் புத்திக் கூர்மையில்லாவிட்டால் வேறு யாருக்கு இருக்கிறது? எந்த விதத்திலாவது, எப்படியாவது, சக்கரவர்த்தியிடம் நேரில் ஓலையைக் கொடுத்து விடவேண்டும் என்று நான் இட்ட கட்டளையை அவன் நிறைவேற்றி விட்டான். அதனுல் பழுவேட்டரையர்கள் கோபங் கொண்டிருக்கிருர்கள். இதில் வந்தியத் தேவனின் தவறு என்ன?" என்று ஆதித்த கரிகாலன் கேட்டான்.

"தாங்கள் சொல்லி அனுப்பிய காரியத்தோடு அவன் நின்றிருக்க மாட்டான். வேறு வேண்டாத காரியங்களிலும் தலையிட்டிருப்பான்!" என்ருன் பார்த்திபேந்திரன்.

"நீ சற்றுச் சும்மா இரு! தாத்தா! ஏன் இப்படி மௌனமாயிருக்கிறீர்கள்? தங்களுடைய கருத்து என்ன? ஒரு பெரும் படை திரட்டிக் கொண்டு சென்று தஞ்சாவூரிலிருந்து சக்கரவர்த்தியை மீட்டுக் காஞ்சிக்கு அழைத்து வந்து விட்டால் என்ன? எத்தனை நாள் சக்கரவர்த்தியைப் பழுவேட்டரையர்கள் சிறையில் வைத்திருப்பது போல் வைத்திருப்பதை நாம் பார்த்துக் கொண்டிருப்பது? எத்தனை நாள் பழுவேட்டரையர்களுக்குப் பயந்து காலம் கழிப்பது?" என்று பொங்கினுன் ஆதித்த கரிகாலன்.

தம் வாழ்நாளில் அறுபத்தாறு போர்க்களங்களைக் கண்டு அநுபவம் பெற்றவரான திருக்கோவலூர் மலையமான் — மிலாடுடையார் — மறுமொழி சொல்லுவதற்காகத் தொண்டையைக் கனைத்துக் கொண்டார். இதற்குள் எதிரே கடல் அலைகள் தெரியவும் "முதலில் இந்த ரதத்திலிருந்து இறங்குவோம், தம்பி! வழக்கமான இடத்தில் போய் உட்கார்ந்து பேசுவோம். எனக்கு வயது ஆகிவிட்டதல்லா? ஓடுகிற ரதத்தில் பேசுவது எளிதாக இல்லை" என்ருர்.

# நிலாச் சாப்பாடு

புஷ்யன்

மொட்டை மாடியில் சாய்வு நாற்காலியைப் போட்டுக்கொண்டு அதில் சாய்ந்திருந்தேன். வாயில் வெற்றிலைப் பாக்கை மென்று கொண்டே வானத்தை அண்ணாந்து பார்த்துக்கொண்டு நட்சத்திரக் கூட்டங்களையும், பௌர்ணமி நிலவையும் ரஸித்துக் கொண்டிருந்தேன். என்னுடைய மனம் எல்லையற்ற குதூகலத்துடனிருந்தது.

கல்யாணி வேலை எல்லாவற்றையும் முடித்துக்கொண்டு கையில் பால் டம்ளருடன் என்னருகே வந்து நின்றாள். அவளுடைய மூக்கில் ஜ்வலித்த வைர மூக்குத்தி நிலவில் பளீரென மின்னியது. அவளுடைய கை வளையல்கள் ஒளிபெற்றுத் திகழ்ந்தன. "என்ன கல்யாணி! அடுத்த பௌர்ணமியன்று ஒரு நிலாச் சாப்பாடு ஏற்பாடு பண்ணலாமா? நண்பர்கள் புடைசூழச் சாப்பிட்டால் எவ்வளவு ஆனந்தமயிருக்கும்?" என்றேன்.

"ஓ. அதற்கென்ன, அப்படியே செய்யலாம். எனக்கும் அதுபோல நிலாச் சாப்பாடு சாப்பிட வேண்டும் என்று ரொம்ப நாளாகவே ஆசை" என்றாள் கல்யாணி.

உடனே அடுத்த பௌர்ணமிக்கு நிலாச் சாப்பாட்டுக்கு என்னென்ன செய்யலாம் என்று திட்டம் போட்டோம். ஆனந்தமாக இன்னும் என்னவெல்லாமோ பேசிக் கொண்டிருந்தோம்.

பௌர்ணமிக்கு ஒரு வாரத்துக்கு முன் எதிர் வீட்டுக்கு யாரோ புதிதாகக் குடி வந்தார்கள். கணவனும் மனைவியுமாக இருவரும், அவனுடைய வயது சென்ற விதவைத் தாயாரும் இருந்தார்கள்.

அவன் ஒரு பாங்கில் குமாஸ்தாவாக இருந்து வந்தான். வயது இருபத்தைந்து இருக்கும். சாதாரணமான தோற்றம், நடை உடை பாவனை எல்லாம் மிகவும் அடக்கமாக இருந்தது. அவனுடைய மனைவிக்கு வயது பதினெட்டு அல்லது பத்தொன்பது இருக்கும். நல்ல களையான முகம். குடும்பத்துக்கு மிகவும் பொருத்தமான பெண் என்பதை அவளுடைய உள்ளங்கால் முதல், உச்சி வரையில் ஒவ்வொன்றும் 'பளிச்' என்று எடுத்துக் காட்டின.

அன்று சாயந்திரம் ஆபீஸிலிருந்து திரும்பும்போது எங்கள் தெருக் கோடியில் நானும் அந்த பாங்க் குமாஸ்தாவும் முதன் முதலாகச் சந்தித்தோம். "நீங்கள் எதிர் வீட்டுக்குப் புதிதாகக் குடி வந்திருக்கிறீர்கள், இல்லையா?" என்று மெதுவாகப் பேச்சை ஆரம்பித்தேன்.

"ஆமாம், இதற்குமுன் கோடம்பாக்கத்தில் இருந்தேன். மழைக் காலமானால் ரொம்பவும் கஷ்டமாகி விடுகிறது. அங்கு வீடு வசதியேயில்லை. எப்போது அந்த இடத்தை விட்டுப் போகலாம் என்று ஆறு மாசமாகத் தேடிப் போனவாரம்தான் உங்கள் எதிர் வீட்டில் இடம் கிடைத்தது" என்றார் அவர்.

"எதிர் வீட்டு மனிதர் ரொம்பவும் நல்லவர். நீங்கள் ஒன்றும் கவலைப்பட வேண்டாம். எல்லாச் சௌகரியங்களும் உங்களுக்குச் செய்து கொடுப்பார்" என்றேன்.

"ஆமாம், ரொம்ப நல்லவர்தான். ஒரு மாச வாடகைதான் அட்வான்ஸ் கொடுத்தேன்."

இப்படியே வீடு நெருங்குமுன் எங்கள் சிநேகம் நெருங்கிவிட்டது. நான் வீட்டுக்குள் நுழையும்போது உள்ளேயிருந்து ஒரு பெண்மணி வெளியே வந்தாள். என் மனைவி கல்யாணி உற்சாகமாக அவள் பின்னோடு வந்து வழியனுப்பி வைத்தாள்.

"கல்யாணி! அந்தப் பெண் யார்?" என்று கேட்டேன்.

"எதிர் வீட்டுக்குப் புதிதாகக் குடி வந்திருக்கிறார்கள். ரொம்ப நல்லவர்கள். தங்கமான குணம்" என்றாள்.

"இப்பொழுதுதான் நானும் கோபாலனும் சிநேகமானோம். நீயும் அதற்குள் அவர் மனைவியுடன் சிநேகமாகி விட்டாய்" என்று சொல்லிச் சிரித்தேன்.

கல்யாணியும் என்னுடன் சேர்ந்து சிரித்துவிட்டு "நிலாச் சாப்பாட்டுக்கு அவர்கள் இருவரையும் கட்டாயம் கூப்பிட வேண்டியதுதான்" என்றாள்.

"சந்தேகமென்ன, அவர்கள் இல்லாமலா நிலாச் சாப்பாடு?" என்றேன்.

* * *

பௌர்ணமிக்கு முதல் நாள் சாயந்திரம் கடைக்குப்போய் நிலாச் சாப்பாட்டுக்கு வேண்டிய சாமான்கள் எல்லாம் வாங்கி வந்து போட்டு விட்டேன். நான் என்னுடைய ஆபீஸ் நண்பர்கள் சீனு, தியாகு, நரஸிம்மன், சந்திரசேகன் நால்வரையும் அழைத்திருந்தேன். மைலாப்பூரில் என் அத்தை பிள்ளை ஒருவன் இருந்தான். அவனையும் எதிர் வீட்டுக்குப் புதுக் குடித்தனம்

வந்திருந்த புது நண்பன் கோபாலனையும் குடும்பத்தோடு அழைத்திருந்தேன்.

கல்யாணி அவளுடைய லேடீஸ் கிளப் சிநேகிதிகளையும் பக்கத்து வீட்டுப் பங்கஜத்தையும் அழைத்திருந்தாள்.

பௌர்ணமி அன்று நிலாச் சாப்பாட்டுக்கு வேண்டிய சமையல் தயாராகிக்கொண்டிருந்தது. கூடமாடச் சற்றுக் காரியங்களை செய்துக் கொடுத்துக் கொண்டிருந்தாள் ராஜம். அவள்தான் எதிர்வீட்டுக் கோபாலனின் மனைவி. இப்படி வேலை செய்து கொண்டிருக்கும்போதே கல்யாணி ராஜத்தின் வாயைக் கிளறிக் கொண்டிருந்தாள். மெள்ளப் பேச்சு வாக்கிலே அவளுடைய விருத்தாந்தங்களையும் தெரிந்து கொண்டோம்.

## 2

ராஜத்தினுடைய தகப்பனார் ஒரு வக்கீல்; சுமாரான வரும்படி உடையவர். அவருக்கு ராஜத்துடன் வசந்தா என்ற பெண்ணும் பிச்சுமணி என்ற மூத்த பிள்ளையும் இருந்தார்கள்.

பிச்சுமணியும், ராஜமும் நகமும், சதையும் போல் வளர்ந்தனர். ராஜம் என்றால் பிச்சுமணிக்கு உயிர். ராஜமும் 'அண்ணா, அண்ணா' என்று அவனையே வளைய வந்து கொண்டிருப்பாள். அவன் அவளுக்குத் தினமும் பாடங்களை யெல்லாம் சொல்லித் தருவான். பிச்சுமணியுடன் அவனுடைய வகுப்பில் படித்தவன் கோபாலன். அவன் பிச்சுமணியுடன் படிக்க அடிக்கடி அவனுடைய வீட்டுக்கு வருவான். படிக்கும் நேரம் தவிர மற்ற சமயங்களில் மூவரும் ஏதாவது விளையாடுவார்கள், செஸ் ஆட்டம், கேரம் என்று.

நாள் ஆக ஆக கோபாலனிடம் ராஜத்துக்குப் பற்றுதல் ஏற்பட்டு விட்டது. என்றாவது கோபாலன் வராவிட்டால், "என் கோபாலன் வரவில்லை? போய் அழைத்து வா, அண்ணா!" என்று பிச்சுமணியைத் தொந்தரவு செய்வாள்.

ஒவ்வொரு சமயம் அவன் அவளுடைய தொந்தரவு பொறுக்காமல், "என் அம்மா கோபாலன், கோபாலன் என்று உயிரை விடுகிறாய்? அவனையா கல்யாணம் பண்ணிக்கொள்ளப் போகிறாய்?" என்று கேட்பான் பிச்சுமணி குறும்புக் கோபத்துடன்.

"ஆமாம்; அவனைத்தான் கல்யாணம் பண்ணிக் கொள்ளப் போகிறேன்" என்று தைரியமாகச் சொல்லுவாள் ராஜம்.

பிச்சுமணியும், கோபாலனும் எஸ். எஸ். எல். ஸி. படித்துவிட்டு மேலே படிக்கச் சென்னைக்கு வந்து விட்டார்கள். பிச்சுமணி ஊருக்குக் கடிதம் எழுதும்பொழுது கோபாலனும் ராஜத்துக்குக் கடிதம் எழுதுவான். நன்றாய்ப் படிக்கும்படி புத்திமதி அளிப்பான். அவளும் அவனுக்கு ஆசையோடு பதில் எழுதுவாள்.

அந்த வருடம் பரீட்சை முடிந்து கோடை விடுமுறைக்கு வந்த போது ராஜம் ஒரேயடியாக மாறிப் போய்விட்டிருந்தாள்.

ஒரு வருடம் கழித்துக் கோபாலனைப் பார்த்ததும் ஏதோ விவரம் புரியாத வெட்கம் ராஜத்தைச் சூழ்ந்து கொண்டது. முன்போல் அவனுடனும், பிச்சு மணியுடனும் சேர்ந்து வாசல் அறையில் கும்மாளமடிக்க முடியவில்லை. வாயிற்படியில் நின்று கதவின் இடுக்கில் ஒடுங்கிக் கொண்டு அப்படியும், இப்படியும் கதவை ஆட்டிக்கொண்டே ஏதாவது பேசுவாள். முன்போல் தங்கு தடையின்றி மடை திறந்த வெள்ளம்போல் பேச்சு வரவில்லை. பத்துக் கேள்வி கேட்டால் ஒரு கேள்விக்கு 'உம்' என்றோ 'ஊஹூம்' என்றோ ஒரே வார்த்தையில் அல்லது தலையசைப்பில் பதிலளித்தாள்.

அப்படிப் பதிலளிக்கும் போது அவளை யறியாமல்



ஏதோ ஒரு சக்தி அவளை நடுங்கச் செய்யும், மெய்சிலிர்க்கச் செய்யும்—பயத்தால் அல்ல, ஒருவித இன்பத்தால்.

ராஜத்துக்கு அப்போது பதினேழு வயது முடிந்து பதினெட்டாவது ஆண்டு ஆரம்பமாகிவிட்டது. அவள் தகப்பனார் அவளுடைய படிப்பை நிறுத்திவிட்டு அவள் கல்யாணத்துக்கு வரன் தேட ஆரம்பித்தார்.

நல்ல 'பசை'யுள்ள அவருடைய கட்சிக்காரனுடைய பிள்ளையையே நிச்சயித்தார்.

பிச்சுமணிக்கு இது தெரிந்ததும் மிகவும் கோபம் உண்டாகியது. கோபாலனுக்குத்தான் ராஜத்தைக் கொடுக்க வேண்டுமென்று வாதாடினான். ஆனால் பயனில்லை. அவர் ஒரே பிடிவாதமாக இருந்தார். அவர் நிச்சயித்த வரன் நல்ல படிப்பாளி, நல்ல உத்தியோகத்திலிருந்தான். நிறையச் சொத்து இருந்தது. குணம், சுபாவம் எல்லாம் வெகு நல்ல மாதிரி. கோபாலனைவிட எல்லாவிதத்திலும் அவளுடைய தகப்பனார் நோக்கில் உயர்ந்தவன் தான். ஆனால் 'காதல்' என்பது கோபாலனுக்கும் ராஜத்துக்கும் இடையில் மலர்ந்திருக்கிறதே! குழந்தை முதல் இணை பிரியாமல் அப்போதிலிருந்தே 'அப்பா, அம்மா' விளையாட்டு விளையாடினது எல்லாம் எப்படி மறக்கும்? அவனைத் தவிர வேறு ஒருவனை மணக்க ராஜம் இசைவாளா? அதையெல்லாம் நன்கு அறிந்திருந்த பிச்சுமணி ராஜத்தைக் கோபாலனுக்குத்தான் கொடுக்க வேண்டுமென்று சொன்னான். அவனுடைய தகப்பனார் அதற்குத் தயாராக இல்லை. தானாக ராஜத்தை வந்தடையவிருக்கும் ஐசுவரியத்தையும், அதிர்ஷ்டத்தையும் 'காதல், அன்பு' என்று எண்ணி இழக்க அவருக்கு மனம் வரவில்லை.

நிச்சயதார்த்தம் நடந்து விட்டது. பிச்சுமணிக்கு அந்த நிமிஷம் முதல் அந்த வீட்டில் இருக்கப் பிடிக்கவில்லை. "இனி, இந்த வீட்டில் காலெடுத்து வைக்க மாட்டேன்" என்று சொல்லி வெளியேறினான். அன்று போனவன்தான். எங்கு போனான், என்ன செய்கிறான் என்ற தகவலே இல்லை.



ரஸிகர் (தமது நண்பரைப் பார்த்து):- ஆஹா! பாகவதர் பாட்டில்தான் என்ன குளுமை! என்ன குளிர்ச்சி!

நண்பர் :—ஏன் ஸார், குளுமையாயிருக்காது? பாகவதர் இப்பொழுது தானே 'கூல் டிரிங்' சாப்பிட்டார்?

கோபாலனுக்குக் கூடச் சொல்லாமல், கொள்ளாமல் போய்விட்டான். தன் தங்கையைத் தன் நண்பனும், ராஜத்தின் நேசனுமான கோபாலனுக்கே விவாகம் செய்து வைக்க முடியாமல் போன பலஹீனம் அவனைப் பார்க்கவே தைரியமில்லாமல் செய்து விட்டது போலும்.

கோபாலன், ராஜம் தனக்கில்லாமல் போனது குறித்துப் பட்ட வருத்தத்தைச் சொல்லி முடியாது. ஆனால் அவன் தன் சுபாவப்படி அதைத் தன் மனத்துள்ளேயே வைத்துக் கொண்டிருந்தான்.

திடீர் என்று ஒரு எதிர்பாராத சம்பவம் நடந்தேறியது. ஜாதகம் எல்லாம் நன்றாகப் பொருத்தம் பார்த்து—வரனுக்கு எண்பது வயது ஆயுசு என்று ஜோசியர் உறுதி கூறியிருந்தும் அதைக் கவனியாமல் யமன் வந்து விட்டான். கல்யாணத்துக்குப் பதினைந்து நாட்களுக்கு முன் திடீரென்று மாரடைப்பால் காலமாய் விட்டான்.

ராஜத்தின் தகப்பனாருக்குச் சப்த நாடியும் ஒடுங்கி விட்டது. கல்யாணமானதும் இப்படி ஏற்படாமல், அதற்கு முன்னாலேயே ஏற்பட்டுத் தன் பெண்ணைக் காப்பாற்றிய கடவுளைத் தன் வாயாரத் துதித்தார். அதற்குப் பிறகு ராஜத்தின் விவாகத்தை ஒத்திப் போட அவர் விரும்பவில்லை. அவளுடைய காதலன் கோபாலனுக்கே விவாகத்தை முடித்து வைத்தார்.

கோபாலனுக்கும் ராஜத்துக்கும்தான் விவாகம் நடக்க வேண்டுமென்று ஒற்றைக் காலில் நின்று பிடிவாதம் பிடித்து வீட்டை விட்டு வெளியேறிய பிச்சுமணியில்லாமலேயே விவாகம் நடந்தேறியது. அவனைக் கண்டு பிடிக்க அவள் தந்தையும் கோபாலனும் எவ்வளவோ சிரமப்பட்டார்கள். ஒன்றும் பயனில்லாமல் போயிற்று.

ராஜமும், கோபாலனும் அன்புடன் வாழ்க்கையை நடத்தி வந்த பொழுதிலும் பிச்சு

மணி இல்லாதது அவர்களுக்கு எப்போதும் ஒரு குறையாகவே இருந்து வந்தது.

### 3

"ஹாம்! இனி அவனைப் பார்க்கப் போகிறோமோ இல்லையோ! எங்கப்பாவும், அம்மாவும் அவன் கவலையாகவே நாளுக்கு நாள் துரும்பாகிக் கொண்டிருக்கிறார்கள்" என்றாள் ராஜம் மிகுந்த விசனத்துடன்.

"கவலைப்படாதேம்மா. சீக்கிரம் உன் அண்ணன் கிடைத்து விடுவான்" என்று ஆறுதல் கூறினேன்.

ராஜத்தின் விருந்துத் தயாரிப்பு அற்புதமாக இருந்தது. ஒவ்வொன்றையும் ருசி பார்த்து அப்படியே வியந்து விட்டேன். விருந்தினர்கள் கொஞ்சம் தான் என்றாலும் ருசியைப் பார்த்த போது தயாரித்த அளவு போதுமா என்று சந்தேகம் வந்து விட்டது.

நிலா பூரணமாகச் செக்கச் செவேலென்று கீழ் வானத்திலிருந்து புறப்பட்டது. மெள்ள, மெள்ள மேலே வந்து வெள்ளை வெளேரென்று பிரகாசித்தது. தாரகைகள் எல்லாம் ஒவ்வொருவராய் வந்தார்கள். சிறிது நேரம் மாடியில் உட்கார்ந்து அரட்டை அடித்துக் கொண்டிருந்து விட்டு எட்டு மணியானதும் விருந்து சாப்பிட உட்கார்ந்தோம். ராஜமும் கல்யாணியும் எங்களுக்குப் பரிமாறினார்கள்.

என் நண்பன் சுந்தரேசன் இன்னும் வாராதது குறித்து என் மனம் தவித்துக் கொண்டிருந்தது. ஆறு மணிக்கெல்லாம் வந்துவிடு என்று நூறு தடவைக்கு மேல் சொல்லியிருந்தும் இன்னும் வரக்காணோமே என்று யோசித்துக் கொண்டிருந்தேன்.

கல்யாணி பரிமாறிக் கொண்டிருந்தாள். ராஜம் பாயஸம் கொண்டு வரக் கீழே இறங்கினாள். பாதி மாடிப் படியில் 'அண்ணா' என்று அவள் கூக்குரலிட்டது கேட்டது. 'ராஜம்' என்று எதிர்க் குரலும் கூடவே வந்தது. அவன் வேறு யாருமில்லை. என் நண்பன், இதுவரையில் நான் எதிர்பார்த்த என் அருமைச் சுந்தரேசன் தான்.

ஆமாம்; சுந்தரேசன் தான் அவளுடைய அண்ணன். ராஜத்துக்கு ஏற்பட்ட சந்தோஷம் சொல்லி முடியாது. கோபாலன் சுந்தரேசனைக் கண்டதும் அப்படியே கட்டிக் கொண்டான். எனக்கும் கல்யாணிக்கும் சந்தோஷம் தாங்க முடியவில்லை.

சுந்தரேசன் இத்தனை நாட்கள் டில்லியில் எங்கள் கம்பெனியின் தலைமைக் காரியாலயத்தில் இருந்தான். நாலு மாதமாகத் தான் இங்கு மாற்றலாகி வந்திருக்கிறான்.




"என்ன ஸார்! உங்கள் பையன் 'டான்ஸ்' ஆடக் கற்றுக் கொண்டான் அல்லவா?"
"ஆமாம்!"
"அவன் இப்பொழுது என்ன செய்து கொண்டிருக்கிறான்?"
"அவன் கவர்ன்மெண்ட் பஸ்ஸில் கண்டக்டராக வேலை பார்க்கிறான், ஸார்!"

---

"என்ன ராஜம், உன் அண்ணன் பெயர் பிச்சுமணி என்றாயே, இப்போது 'யாரோ' சுந்தரேசன் என்பவனைப் பிடித்துக் கொண்டு 'அண்ணா' என்று கூத்தாடுகிறாயே!" என்று கேலி செய்தேன்.

"ஆமாம், மாமா! உங்களுக்கெல்லாம் அவனுடைய உண்மைப் பெயரைச் சொல்ல மறந்து விட்டேன். வீட்டில் எல்லோரும் பிச்சுமணி என்று செல்லமாகக் கூப்பிடுவதால் அதையே கூறிவிட்டேன். அவனுடைய பெயர் சுந்தரேசன்தான்" என்றாள்.

ராஜமும் கோபாலனும் "நிலாச் சாப்பாடு எங்கள் வாழ்நாள் பூராவும் சந்தோஷமாக்கி விட்டது" என்று மகிழ்ந்தார்கள்.

என் நண்பன் சுந்தரேசன் தன் தங்கையின் மனம்போலக் கல்யாணம் நடந்து விட்டதுடன் தானும் தன் வீட்டாருடன் சேர்ந்து வாழும்படி செய்து விட்டது நிலாச் சாப்பாடு என்று சந்தோஷப் பட்டான். என்னையும் கல்யாணியையும் வாழ்த்தினான்.

நானும் கல்யாணியும் நிலாச் சாப்பாடு இப்படிக் கலியாண விருந்தாகவே முடிந்து விட்டதை நினைத்துச் சந்தோஷப்பட்டோம்.

# அக்கப்போர்

"நாகபுரியில் தறிக்காரர்கள் ஆர்ப்பாட்டம் செய்தனர்." —ஒரு செய்தி

தறிக்காரர்களுக்கு எவ்வளவு குறை இருந்தாலும் பதறிக் காரியம் எதுவும் செய்துவிட மாட்டார்கள் என நம்புகிறோம்.

★

"வனஸ்பதியை ஒழிப்பது சர்க்கார் நோக்கமில்லை." —ஒரு மந்திரி

வனமகோத்சவத்தை ஆதரிக்கும் மந்திரிகள் வனஸ்பதியை ஒழிக்க நினைப்பார்களா!

★

"பொது ஜனங்களுடைய சௌகரியத்துக்காக 'இஷ்டம்போல் பிரயாண' டிக்கெட்டுகளை அமுலுக்குக் கொண்டு வர முடியாது."

—கனம் சந்தானம்

மந்திரிகளுடைய இஷ்டம்போல் பிரயாணத்துக்கே ரயில்கள் போதாமல் இருக்கும்போது பொது ஜனங்களுடைய இஷ்டத்தை யார் கவனிக்கப் போகிறார்கள்!

★

"ஜில்லா போர்டு உபாத்தியாயர்கள் சங்கத்தின் வைர விழா." —ஒரு செய்தித் தலைப்பு

ஏழை உபாத்தியாயர்கள் வைர விழாக் கொண்டாடுவது சாத்தியமா!

★

"எல்லா வேலைகளுக்கும் சர்வீஸ் கமிஷன் ஆள் எடுப்பது என்பது முடியாது."

—கனம் கோபால் ரெட்டி

அப்படியானால் சர்வீஸ் கமிஷனையே எடுத்து விட்டால் என்ன!

★

"நடுத்தர வகுப்பினருக்கு வரியை உயர்த்திக்கொண்டே போவது நல்லதல்ல."

—டாக்டர் செரியன்

நடுத்தர வகுப்பினரை இந்த விதத்திலாவது உயர்த்தக் கூடாதா!

★

"ஸ்ரீ தாண்டன்ஜிக்கு ரூ. 101801-க்குப் பணமுடிப்பு அளிக்கப்பட்ட ஒரு கூட்டத்தில் அவர் 'பண மூட்டை'களைப் பற்றிக் கண்டிப்பாகப் பேசினபோது கூட்டத்தில் குழப்பம் ஏற்பட்டது." —கான்பூர் செய்தி

ஸ்ரீ தாண்டன்ஜியிடமிருந்த பணமூட்டை குழப்பத்துக்குத் தப்பியிருக்கும் என்று நம்புகிறோம்!

★

"இருதார மணத் தடை சட்டத்தை ஆட்சேபித்து மனு."

"மதுவிலக்கை ஆட்சேபித்து மனு."

"கம்யூனல் ஜி. ஓ. செல்லாது என்ற தீர்ப்பை ஆட்சேபித்து மனு."

"வீட்டு வாடகை கண்ட்ரோலை ஆட்சேபித்து மனு."

—இவைமாதிரி செய்தித் தலைப்புகள்

இதையெல்லாம் பார்க்கும்போது, நற்காலச் சட்ட திட்டங்களையெல்லாம் ரத்து செய்துவிட்டு மனுதர்ம சட்டத்துக்கே போய் விடலாம் என்று தோன்றுகிறதல்லவா!

★

"சிலோனைச் சேர்ந்த ஒரு குருட்டுப் பெண்ணுக்கும், யார்க்ஷையரைச் சேர்ந்த ஒரு குருட்டு வாலிபனுக்கும் காதல் ஏற்பட்டு சமீபத்தில் மணம் நடந்ததாம்." —ஒரு செய்தி

காதலுக்குக் கண் இல்லை என்பதற்கு வேறு என்ன அத்தாட்சி வேண்டும்!

★

"ரத்தம் சிந்தியாவது பாக்டூன்கள் பாக்டூனிஸ்தானை அடையக் கங்கணம் கட்டிக் கொண்டு இருக்கிறார்கள்." —காபூல் ரேடியோ

ரத்தம் சிந்துவதைப்பற்றி முதலிலே சிந்தியாமல், இந்தியா காட்டிய வழியில், சமாதானமாக பாக்டூன்கள் பாக்டூனிஸ்தான் அடைவது பற்றிச் சிந்திப்பார்களாக!

★

"சென்னை புழலேரிக்குப் போதுமான தண்ணீரைக் கிருஷ்ணா நதியிலிருந்து கொண்டு வரப் போகிறார்களாம்!" —செய்தி

பிறகு கிருஷ்ணா நதிக்குப் போதுமான தண்ணீரைக் கோதாவரியிலிருந்து கொண்டு வருவார்களாக!

★

"புல்லம்பாடியில் உணவு மந்திரி."

—செய்தித் தலைப்பு

புல்லை உணவாக்குவது எப்படி என்பதை அவர் ஆராயப் போயிருக்க மாட்டார் என நினைக்கிறோம்!

★

"இந்த ஸெஷன் ஆரம்பிக்கப்பட்டதிலிருந்து அசெம்பிளியில் 1000 கேள்விகளுக்கு மேல் கேட்கப்பட்டு விட்டன."

—சென்னைச் செய்தி

எப்படியாவது 'கேள்வி அறிவு' விருத்தியடைந்தால் சரிதான்!

★

"டிட்டோ சர்க்காரைக் கவிழ்க்கவும்."

—யூகோ மக்களுக்கு ருஷ்யர் உபதேசம்

இந்த உபதேசத்துக்கு யூகோ மக்கள் 'டிட்டோ' போடுவார்களா!

★

"பூக்கடை போலீஸ் ஸ்டேஷனை வேறு இடத்துக்கு மாற்றச் சர்க்கார் முடிவு."

—ஒரு செய்தி

அப்பொழுது அது பூக்கடை போலீஸ் ஸ்டேஷனாக இருக்க முடியாது!

★

"பூரண மதுவிலக்கு சாத்தியமற்ற லட்சியமாகையால் மிதக்குடியே புதிய ஜஸ்டிஸ் கட்சியின் நோக்கமாக இருக்க வேண்டும்."

ஸ்ரீ பி. டி. ராஜன்

இது மிகவும் பெருமிதமடைய வேண்டிய இலட்சியம்தான்!

★

"டில்லியின் மீது அடையாளம் தெரியாத மர்ம விமானம் ஒன்று பறந்தது."

—டில்லிச் செய்தி

யாராவது பிரமுகர் ஒருவருடைய மானம் காற்றில் பறந்திருக்கும். அதைத்தான் விமானம் என்று மக்கள் தவறாகக் கருதி இருக்க வேண்டும் என்கிறார் ஒரு மானஸ்தர்.

# மத்திய கேந்திரம்

ஜெயமணி

## ஈரான்—4.

**போ**ரை நிறுத்தி விட்டுத் திரும்பி வரும்படி, திடீரென்று போல்ஷிவிக் ருஷ்ய சர்க்கார் தங்களுடைய துருப்புகளுக்குக் கட்டளையிட்டனர்; ஈரான் சர்க்காருடன் சமரசப் பேச்சையும் ஆரம்பித்தனர்; ஜார் சக்கரவர்த்தி காலத்தில் கைப் பற்றப் பட்ட பாரசீகப் பிரதேசங்களை யெல்லாம் திருப்பிக் கொடுத்தனர்; ஈரானுக்குக் கொடுத்திருந்த கடன் தொகைகளை யெல்லாம் செலவுக் கணக்கில் எழுதி விட்டதாக அறிவித்தார்கள். இவ்வாறு ஒரு சில தினங்களுக்குள் ஈரானிலே அடுக்கடுக்காக எதிர்பாராத பல ஆச்சரியமான சம்பவங்கள் நிகழ்ந்து விட்டன.

ஒரு நாடு மற்றொரு நாட்டின் விஷயத்தில் தன் நட்பையும் நல்லெண்ணத்தையும் தெரிவிப்பதற்கு இவற்றைக் காட்டிலும் வேறு என்ன செய்ய முடியும்? எனவே, இறுதியாக ருஷ்யாவுக்கும் ஈரானுக்கும் 1921-ம் வருஷம் சிநேக உடன் படிக்கை ஏற்பட்டது.

ஈரானிலே ஒரு புறம் மேற்படி உடன் படிக்கை ஏற்படுவதற்குப் பூர்வாங்கமான பேச்சு வார்த்தைகள் நடந்து வருகையில், மற்றொரு புறம் ஒரு விபரீத நாடகம் நடக்கலாயிற்று. 'எரிகிற வீட்டில் பிடுங்கிய வரையில் ஆதாயம்' என்பதற்கிணங்க, அப்போது அந்த நாட்டில் நிலவிய குழப்பத்தில் ரிஜா கான் என்ற இளம் இராணுவ அதிகாரி மூவாயிரம் ஈரான் சிப்பாய்கள் அடங்கிய ஒரு படையுடன் தலைநகர் மீது படையெடுத்தார். சர்க்காரைக் கைப்பற்றி மந்திரிகளை யெல்லாம் கைது செய்தார். பிறகு இந்த ரிஜா கான் டாக்டர் ஜியா உத்தீன் என்பவரைப் பிரதம மந்திரியாக நியமித்தார். தன்னைத் தானே யுத்த மந்திரியாகவும் நியமித்துக் கொண்டார்!

மேற்படி ரிஜா கானை யாரும் ஞாபகத்தில் வைத்துக் கொள்ளத் தவறமாட்டார்கள். ஏனெனில் சென்ற சில தினங்களாக ஈரானில் ஏற்பட்டுள்ள கொந்தளிப்பில் ரிஜா கானின் பெயர் அடிக்கடி அடிபட்டு வருகிறது அல்லவா? தற்போது ஈரான் மன்னராக இருக்கும் மூகமது ரிஜாவின் தந்தையான ரிஜா கான் நேர்மையற்ற முறையில் ராஜ்யத்தைக் கைப்பற்றி, சிம்மாசனம் ஏறியதாக ஈரான் மக்களில் பலர் குற்றஞ் சாட்டத் தொடங்கியிருக்கிறார்கள் அல்லவா?

*　　　　*　　　　*

**எ**ன்று ஈரான்—ருஷ்ய உடன்படிக்கை ஏற்பட்டதோ, அன்றே 1919-ம் வருஷத்திய ஆங்கிலோ—ஈரான் உடன்படிக்கை ரிஜா கான் நியமித்த புதிய மந்திரி சபையினால் ரத்து செய்யப் பட்டது.

ரிஜாகானின் சர்வாதிகாரம் தடபுடலாக இருந்ததால், ஷாவும் பிரதம மந்திரியும் பொம்மைகள் போல் இருக்க நேர்ந்தது. இறுதியில் பிரதம மந்திரி ஜியா உத்தீன் ரிஜா கானுக்குப் பயந்துகொண்டு, ஈரானை விட்டு வெளியேறி, பிரிட்டிஷாரின் பாதுகாப்பை நாடும்படியாயிற்று.

அவருக்குப் பின் அதிகாரத்துக்கு வந்த பிரதம மந்திரிகளும் ரிஜா கானை எதிர்க்கத் துணியாமல் ராஜிநாமா செய்தார்கள். கடைசியாக யுத்த மந்திரியாகவும் பிரதம தளபதியாகவும் விளங்கிய ரிஜா கானே 1923-ல் பிரதம மந்திரி பதவியைக் கைப்பற்றிக் கொண்டார். ரிஜா கானின் ஆட்சியில் தமக்கு ஏதாவது ஆபத்து நேரக் கூடும் என்று பயந்த சுல்தான் அகமது ஷா, ஐரோப்பாவுக்கு ஓடி அஞ்ஞாத வாசம் செய்யலானார். அவர் 1930-ம் வருஷம் ஐரோப்பாவிலேயே காலமானார்.

ஷா ஐரோப்பாவுக்குச் சென்ற பின், ரிஜாகானைத் தலைவராகக் கொண்டு, பாரசீகத்தைக் குடியரசாகப் பிரகடனம் செய்வதற்கான ஏற்பாடுகள் நடந்து கொண்டிருந்தன. அவ்விதமிருக்கையில் குடியரசு முறை ஷியா முஸ்லிம்களின் கொள்கைக்கு முரணாகும் என்ற கதையைச் செல்வாக்குள்ள சில பிரமுகர்கள் கட்டி விட்டார்கள். இறுதியில் ஈரான் பார்லிமெண்டு ரிஜா கானை ஈரான் மன்னராகப் பிரகடனம் செய்ததுடன், அவரது சந்ததிகளில் மூத்த பிள்ளைகள் மன்னர் பட்டத்துக்கு உரியவர்கள் என்றும் தீர்மானித்தது. குறிப்பிட்ட மன்னருக்குப் பிள்ளையில்லா விட்டால், மன்னர் தம் இஷ்டப்படி ஒருவரை அந்தப் பட்டத்துக்கு வாரிசாக நியமிக்க அதிகாரம் உண்டு என்றும் பார்லிமெண்டு தீர்மானித்தது. சுல்தான் அகமது ஷாவுக்கும் அவரது குடும்பத்தினருக்கும் இனி எக்காலத்திலும் ஈரான் மன்னர் பட்டத்துக்கு வர உரிமையில்லை என்றும் பிரகடனம் செய்தது.

அவ்வாறாக, ஈரான் பார்லிமெண்டு ரிஜா கான் மீது பூரண நம்பிக்கை வைத்த

தற்கு ஒரு முக்கிய காரணம் இருந்தது. அதாவது அதற்கு முன் ஈரானை ஆட்சி புரிந்த மன்னர்களைப் போல் ரிஜா கான் அன்னியர்கள் ஆட்டிவைப்பதற்கு இணங்குபவர் அல்ல. ரிஜா கான் மன்னராக வந்தபின், ஈரானிலிருந்து அன்னியர் ஆதிக்கத்தை அறவே ஒழிக்க அவர் முயற்சித்ததே அதற்கு அத்தாட்சியாகும். அவரது காலத்திலே ஈரானில் சிறந்த இராணுவம் உருவாக்கப்பட்டது. நிபுணர்களைத் தவிர வேறெந்த வெளி நாட்டினரும் ஈரானில் இருக்கக் கூடாது என்ற கொள்கையும் அவசர அவசரமாக அமுலுக்குக் கொண்டு வரப்பட்டது.



கொடிய நாதிர் ஷா டில்லியிலிருந்து பாரசீகத்துக்குக் கொள்ளையடித்துச் சென்ற உலகப் பிரசித்தி பெற்ற மயில் சிம்மாசனம். இது கெட்டித் தங்கத்தினாலும் விலை மதிக்க முடியாத நவரத்தினங்களாலும் இழைக்கப்பட்டது.

* * *

இந்தக் கட்டத்திலே தான் 1939-ல் இரண்டாவது உலக மகாயுத்தம் மூண்டது. மேற்படி யுத்தம் ஆரம்பமானதும், ஈரான் தான் நடுநிலைமை வகிக்கப் போவதாக அறிவித்தது. முதலாவது மகா யுத்தம் மூண்டபோது மோசம் போனது போல் இரண்டாவது மகா யுத்தத்தின்போது மோசம் போய்விடக் கூடாது என்ற உத்தேசத்துடன், மேற்படி நடுநிலைமைக்குப் பங்கம் விளையாமல் பார்த்துக் கொள்ளவும் ஈரான் சர்க்கார் முயன்றனர். எனினும் வல்லரசுகள் ஈரானை சந்தியில் இழுத்து விடவேண்டும் என்று தீர்மானித்திருக்கும்போது ஈரான் சர்க்காரின் முயற்சி பலிக்குமா?

வல்லரசுகளுக்கு ஈரான் எண்ணெய் தேவையாக இருந்தது. ஈரானில் அமைக்கப்பட்ட புதிய ரயில் பாதை மூலம் ருஷ்யாவுக்குச் சாதனங்கள் அனுப்ப வேண்டிய அவசியமும் ஏற்பட்டது.

ஏற்கெனவே விவரியதைப் போல வல்லரசுகளுக்குள் போட்டி யிருந்தாலாவது ஈரானின் சுதந்திர உரிமைக்கு அதிக ஆபத்து ஏற்படாது. ஆனால் சென்ற மகா யுத்தத்தில் பிரிட்டனும் ருஷ்யாவும் நேச நாடுகளாகிவிட்டன அல்லவா? எனவே, 'நரிக்குக் கொண்டாட்டம், நண்டுக்குத் திண்டாட்டம்' என்பது போல் வல்லரசுகளின் கட்டு ஈரானுக்கு வினையாக முடிந்தது!

அவ் விஷயமாக மேற்படி வல்லரசுகள் ஈரானின் அபிப்பிராயத்தைத் தெரிந்துகொள்ள முற்படவில்லை. மளமள வென்று ஈரான் மீது படையெடுத்தன. அன்னியரின் ஆதிக்கத்துக்கு விரோதியாக இருந்த ரிஜாகானை முடி துறக்கும்படி வற்புறுத்தின. அவரது புதல்வரான முகமது ரிஜாவை சிம்மாசனத்தில் அமர்த்தின. முகமது ஷா அவரது தந்தை ரிஜா கானைப் போல் திறமையும் கண்டிப்பும் உள்ளவரல்ல என்பதை அறிந்தே அவர் மன்னராக வருவதற்கு வல்லரசுகள் இசைந்தன.

பிறகு ஈரான் ஐக்கிய நாடுகளில் ஒன்றாகி, ஜெர்மனி முதலிய அச்சு நாடுகள் மீது யுத்தப் பிரகடனம் செய்தது.

முடியிழந்த ரிஜா கானைப் பிரிட்டிஷார் முதலில் தங்கள் ஆதிக்கத்திலே உள்ள மோரீஸ் தீவில் கொண்டு போய் வைத்தனர். பிறகு அவரைத் தென்னாப்பிரிக்காவுக்கு அழைத்துச் சென்றார்கள். ரிஜா கான் 1944-ம் வருஷம் தென்னாப்பிரிக்காவிலேயே காலமானார்.

தன் வினை தன்னைச் சுடும் என்பதற்கு ரிஜா கானின் வாழ்க்கை சிறந்த உதாரணமாகும். கல்தாய் அகமது ஷா அஞ்ஞாதவாசம் செய்து, ஐரோப்பாவிலே காலமாக நேர்ந்ததற்கு ரிஜா கானே காரணம். கடைசியில் ரிஜா கானுக்கும் அதே கதி தான் நேர்ந்தது!

சென்ற மகா யுத்தம் முடிவடைந்தபின், ஈரானிலிருந்து பிரிட்டனும் அமெரிக்காவும் தங்களுடைய துருப்புகளை வாபஸ் செய்து கொண்டன. ஆனால் ருஷ்யா தன் துருப்புகளை வாபஸ் செய்து கொள்ள மறுத்துவிட்டது. ஈரான் எண்ணெயில் பிரிட்டனுக்கு ஏகபோக உரிமை இருப்பதை ருஷ்யா விரும்பவில்லை. எனவே வடக்கு ஈரானில் எண்ணெய் எடுக்கத் தங்களுக்கு உரிமை அளிக்கப்பட்டாலன்றி, தங்கள் துருப்புகளைத் திருப்பி அழைத்துக்கொள்ள முடியாது என்று ருஷ்ய சர்க்கார் கண்டிப்பாகக் கூறிவிட்டனர்.

# அண்ணனும் தம்பியும்!



ஸோமாஸ்

நள்ளிரவு. ஹாஸ்டல் கடிகாரம் 'டாண், டாண்' என்று பன்னிரண்டு தடவை அடித்து ஓய்ந்தது. மெள்ளப் பூனை மாதிரி அடிமேல் அடிவைத்து, சுந்தரம் உள்ளே நுழைந்தான். அவன் கோட்டைக் கழற்றும் சமயத்தில், கதவைத் திறந்துகொண்டு யாரோ வரும் சத்தம் கேட்டது. சுந்தரம் திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தான். ஆள் உருவம் தெரிந்தது. 'டக்'கென்று மின்சார விளக்கின் 'ஸ்விச்'சைப் போட்டான். அந்த ஆள் வேறு யாரும் இல்லை. சுந்தரத்தின் தம்பி மணிதான்!

"அண்ணா, நீ இன்னும் நீ தூங்கவில்லையா?" என்று கேட்டுக்கொண்டே உள்ளே வந்தான் மணி.

சுந்தரத்தின் முகம் அப்போது கோபமாக மாறியது.

"மணி, எங்கேயடா போயிருந்தாய், பரீட்சை சமயத்தில் கொஞ்சங்கூட அக்கறையில்லாமல்!" என்று கோபத்தோடு கேட்டான் சுந்தரம்.

"எங்கேயும் போகவில்லை அண்ணா! வெளியே போயிருந்தேன்!" என்றான் மணி.

"வெளியே போயிருந்தாய் என்பது எனக்கு நீ சொல்லாமலே தெரிகிறது. மணி என்ன ஆகிறது, பார்!"

"மணியா? மணி பன்னிரண்டாகிறது!"

"ராத்திரி பன்னிரண்டு மணிக்கு நீ குஷியாக ஊர் சுற்றிவிட்டு வருகிறாய். எனக்கு என்னடா என்றால் இங்கே கவலையாயிருக்கிறது!" என்று சுந்தரம் கொஞ்சம் அலுப்போடு சொன்னான்.

"கவலை ஏன் படுகிறாய், அண்ணா?"

"கவலை ஏன் படுகிறேனா? நீ வரக்காணோமே என்கிற கவலைதான்!" என்றான் சுந்தரம். அப்போது அவன் முகத்தில் கொஞ்சம் அசடு வழிந்தது.

மணி உடனே பலமாகச் சிரித்துவிட்டு, "அண்ணா, அப்படியா! எனக்காகவா நீ காத்துக் கொண்டிருந்தாய்?" என்று கொஞ்சம் குத்தலாகக் கேட்டான்.

"மணி, உன்னிடம் நான் விளையாடுகிறேன் என்று நினைத்தாயா? பட்டணத்தில் தினம் பத்து மோட்டார் விபத்து நடக்கிறது! இந்த லட்சணத்தில் மணி பன்னிரண்டு ஆகியும் உன்னைக் காணோம். நான் விழித்துக்கொண்டே கவலையோடு எத்தனை நேரம் உட்கார்ந்திருப்பேன்!" என்று சலுகையோடு கடிந்து கொள்ளும் பாவனையில் கேட்டான் சுந்தரம்.

மணி, நாடகப் பாணியில் "ஓஹோ!" என்று அவனை ஊடுருவிப் பார்த்துக் கொண்டே சொன்னான்.

சுந்தரத்தின் முகம் கொஞ்சம் கடுமையாக மாறியது.

"ஓஹோ என்ன ஓஹோ! உன்னைப் பற்றிய கவலையில் எனக்குப் படிக்கவே ஓடவில்லை. தெரியுமா?"

"ஓஹோ! நீ படித்தாயா? இப்படித்தான் நீ படிக்கிற வழக்கமோ?" என்று மணி கேலியோடு கேட்டுச் சிரித்தான்.

"என்ன, என்ன?" என்று சுந்தரம் படபடப்புடன் கேட்டான்.

"அண்ணா, தினம் இப்படித்தான் நீ கோட்டு போட்டுக்கொண்டு படிக்க உட்காருகிறாயோ?" என்றான் மணி.

சுந்தரம் இந்தக் கேள்விக்குப் பதில் சொல்லவில்லை. மௌனமாயிருந்தான்.

மணி மீண்டும் ஆரம்பித்தான்: "அண்ணா எனக்காகக் காத்துக்கொண்டு உட்கார்ந்திருந்ததில் நீ தந்தி வந்ததைக் கூடக் கவனிக்கவில்லை போலிருக்கிறது. ஐயோ, பாவம்!"

சுந்தரம் கொஞ்சம் திடுக்கிட்டு, "என்ன, தந்தியா!" என்றான்.

மணி உடனே கீழே சுட்டிக் காண்பித்து, "அண்ணா, அதோ பார்! கீழே ஒரு தந்தி கிடக்கிறது!" என்றான்.

சுந்தரம் ஒரு விநாடியில் சமாளித்துக் கொண்டு, "ஓ......! ஆமாம். தந்தியை ராத்திரி வேளையில் படிக்க வேண்டாம் என்று இருந்தேன்!" என்றான்.

"ஓஹோ!" என்றான் மணி.

"ஓஹோ என்னடா, எதற்கெடுத்தாலும் ஓஹோ! நீயும் வரவில்லை. தந்தியில் ஏதேனும் கெட்ட செய்தி இருக்கப் போகிறதே என்று பார்க்கவில்லை!" என்றான் சுந்தரம்.

"அண்ணா, நான் பச்சைக் குழந்தை யல்ல. நான் எங்கேயோ வெளியே சுற்றி விட்டதாக நீ என்னைக் கண்டிக்க வருகிறாய். நீ எவ்வளவு மறைத்துப் பேசினாலும் எனக்கு விஷயம் தெரிந்து விட்டது. நீயும் இப்பொழுதுதான் எங்கேயோ போய்விட்டு வந்திருக்கிறாய்!"

"மணி, நான் வெளியே போனேன் என்றால் உன்னைப்போல் இப்படி ஊர் சுற்றப் போகவில்லை, காரியமாகப் போயிருந்தேன்!"

"அது என்ன காரியம் அண்ணா! ராத்திரி பன்னிரண்டு மணி வரையில்?"

சுந்தரத்துக்கு உண்மையிலேயே கொஞ்சம் கோபம் வந்து விட்டது.

"உனக்கு விளையாட்டா யிருக்கிறது, மணி! நான் படிப்பை உத்தேசித்துத் தான் போவேன்!" என்றான்.

"ஓகோ!" என்றான் மணி.

"ஓகோ என்னடா முட்டாள்! மாமா வந்திருக்கிறார் என்று ஒரு ஆள் வந்து சொன்னான்! அவர்தானே நமக்குப் படிப்பதற்குப் பணம் கொடுத்து ஒத்தாசை செய்கிறார்? அவர் கொஞ்சம் ஊரைச் சுற்றிப் பார்க்க வேண்டும் என்று சொன்னார். அவரோடு நெடுகச் சுற்றிவிட்டு இப்பொழுதுதான் வந்தேன்! அவர் வழக்கப்போல் திருவல்லிக்கேணி ஹோட்டலுக்குப் போய் விட்டார்."

"எங்கே என்னைப் பார்த்துச் சொல்லு!" என்றான் மணி.

"உன்னைப் பார்த்துச் சொல்வானேன்? சினிமாவுக்குப் போய்விட்டு அவர் அப்படிப் போனார். நான் நேரே இப்படி வந்தேன் போதுமா?"

"ஓகோ! அப்படியா! அண்ணா, முழுப் பூசணிக்காயைச் சோற்றில் மறைக்கப் பார்க்கிறாயே! ஒரு பொய்யை மறைக்க ஒன்பது பொய் சொல்லுகிறாய்! அதனால் நன்றாக அகப்பட்டுக் கொண்டாய்! மாமாவை அழைத்துக் கொண்டு நீ வெளியிலே போனதாகச் சொல்லியிருக்க வேண்டாம். வேறு யார் பெயரையாவது சொல்லியிருக்கக் கூடாதா? பொய் சொன்னாலும் பொருந்தச் சொல்ல வேண்டாமா, அண்ணா! நான் இப்பொழுதுதானே மாமாவோடு நாடகத்துக்குப் போய் விட்டு, அவரை நுங்கம்பாக்கத்தில் விட்டு விட்டு, பஸ் கிடைக்காமல் நடந்து வருகிறேன்?"

இதைக்கேட்ட சுந்தரம் கோபத்தோடு, "பொய்! சுத்தப் பொய்! நீ என்னை அவமதிக்கிறாய்" என்று கத்தினான்.

மணி, "ஓகோ! அண்ணா, பொய்யும் மெய்யும் விடிந்தால் தெரிகிறது!" என்று சொல்லிக்கொண்டே கீழே கிடந்த தந்தியைக் குனிந்து கையில் எடுத்தான். அதைப் படித்து முடித்ததும் அவன் முகத்தில் அசடு வழிந்தது.

"அண்ணா, இந்தா இதைப் படி!" என்று கூறிச் சுந்தரத்தின் கையில் தந்தியைக் கொடுத்தான்

"நாளைக் காலை திருவனந்தபுரம் எக்ஸ்பிரஸில் சென்னைக்கு வருகிறேன். ஸ்டேஷனில் சந்திக்கவும்.

—மாமா"

என்று சுந்தரம் தந்தியை உரக்கப் படித்ததும் அவன் முகத்திலும் அசடு வழிந்தது.

## கடவுள் ஆணை!

ஒரு சமயம் சர்தார் பட்டேல் திருவாங்கூரை இந்திய யூனியனில் சேர்க்கத் திருவாங்கூருக்குச் சென்றிருந்தார். அந்த அரசர் தம் ராஜ்யத்தை இந்திய யூனியனோடு இணைக்கத் தயங்கினார். ஆகவே அவர் மிகுந்த சாமர்த்தியமாக, "பட்டேல் அவர்களே! இந்த அரசு ஸ்ரீ பத்மநாப ஸ்வாமியினுடையது. இது யூனியனில் சேராமல் தனியாக இருப்பதையே பகவான் விரும்புவதாக என் கனவில் தோன்றிக் கூறினார். கடவுள் ஆணையை மீறுவது நல்லதா?" என்றார்.

உடனே பட்டேல், "ஐயையோ! கடவுள் ஆணையை மீறுவது கூடவே கூடாது. அது மகா பாதகமான செயலாயிற்றே......" என்றார்.

திருவாங்கூர் அரசருக்கு உண்டான மகிழ்ச்சி, கொஞ்ச நஞ்சமல்ல, தம் மொழியைப் பட்டேல் மறுக்காமல் ஏற்றுக் கொண்டாரே என்று.



சற்று நேரங்கழித்து, பட்டேல் மறுபடியும் "ஆனால் ராஜ் பிரமுக்! ஒரு விஷயம். அதே கடவுள் என் கனவிலும் தோன்றி, நீ சுதேச சமஸ்தானங்களை இந்திய யூனியனில் இணைத்தே தீர வேண்டும் என்று ஆணையிட்டிருக்கும் போது நான் எப்படி மீறுவது?" என்று முடித்தார். —நாக




விதி, இன்னும் இது போன்ற விஷயங்களில் எனக்கு ஒரு காலத்தில் நம்பிக்கையே கிடையாது. 'தலைவிதி' என்று யாராவது சொல்லக் கேட்கும் போதும் கதைகளில் படிக்கும் போதும் என்னையு மறியாமலேயே 'மனிதன் அவனுடைய திறமைக் குறைவினால் ஏற்படும் தோல்வியின் காரணங்களை ஆராய்ந்து அவைகளைக் களைந்து வெற்றியை நோக்கி முன்னேற இந்தச் சொல் தடையாக நிற்கிறதே' என்று என் மனம் அங்கலாய்த்தது உண்டு. ஆனால் நம்முடைய அறிவுக்கு மீறிய ஒரு சக்தி ஒவ்வொரு சமயம் நம்முடைய வாழ்வில் குறுக்கிடத்தான் செய்கிறது என்பதை ஏற்றுக் கொள்ளாமல் இருக்க முடியவில்லை.

டாக்டர் ரேணுகாவும் நானும் வைத்தியக் கல்லூரியில் ஒன்றாகச் சேர்ந்து வாசித்துக் கொண்டிருந்தோம். இணை பிரியாத தோழிகள் என்றால் எங்களைத்தான் சொல்ல வேண்டும். ஹாஸ்டலில் ரேணுகா என் அறையில் இல்லாவிட்டால் நான் அவள் அறையில் இருப்பேன். இவ்விதமாக ஒன்றாக இருந்து படித்து டாக்டர் பட்டம் பெற்று இருவரும் ஒரே ஆஸ்பத்திரியில் உத்தியோகத்தில் அமர்ந்தோம். எங்களுக்குள் இவ்வளவு ஒற்றுமை இருந்தும் ஒரே ஒரு வேற்றுமை இருக்கத்தான் செய்தது. ரேணுகாவுக்கு எப்பொழுதும் தலைவிதியின் மேல் அசைக்க முடியாத நம்பிக்கை. அவளுக்குக் கிட்டும் வெற்றிக்கும் தோல்விக்கும் தலைவிதிதான் காரணம் என்று திடமாக நினைப்பது அவளுடைய குணத்தில் ஊறிப் போயிருந்தது. ஆனால் எனக்கோ, படித்துப் பட்டம் பெற்ற அவள் விஞ்ஞானத்தின் உதவியால் நிரூபிக்க முடியாத விதி, மற்றும் இதைப் போன்றவைகளில் நம்பிக்கை வைப்பதைப் பார்க்க வேடிக்கையா யிருக்கும். அடிக்கடி 'ரேணு, இன்று உன்னிடம் சிகிச்சைக்கு வந்த நோயாளிகளின் தலைவிதி எப்படி யிருக்கிறது!' என்று கேட்பேன். ஒவ்வொரு சமயம் அவள் யாராவது ஒரு நோயாளியின் வியாதி சிகிச்சைக்குக் கட்டுப்படவில்லை என்று என்னிடம் தெரிவித்தால் நான் 'அந்த நோயாளியிடம் 'வழக்கமான மருந்து' ஏற்கெனவே இருக்கும்போது நீ வீணாக ஏன் உன் மூளையைக் குழப்பிக் கொண்டு வேறு மருந்து கொடுப்பதில் அளவுக்கு மீறிக் கவனம் செலுத்துகிறாய்!' என்று சீண்டுவேன். 'வழக்கமான மருந்து' என்றால் எங்களுடைய பரிபாஷையில் 'தலை விதியை'த் தான் குறிக்கிறது. ஆதலால் அவள் சிரித்துக் கொண்டே 'பவானி, இன்றைக்கு என்னை இந்த மாதிரி ஏளனம் செய்தாலும் ஒரு காலத்தில் நான் சொல்லுவதில் உண்மை யிருக்கிறதை நீ ஒப்புக் கொள்ளாமல் போக மாட்டாய்' என்பாள்.

அதிகக் கவலையில்லாமல் வான வெளியில் உல்லாசமாகச் சஞ்சரிக்கும் பறவை போல் திரிந்து கொண்டிருந்த அவளுடைய வாழ்க்கையில் டாக்டர் சந்திரசேகரன் குறுக்கிட்டார். நானும் ரேணுகாவும் வேலையா யிருந்த ஆஸ்பத்திரியில்தான் டாக்டர் சந்திரசேகரன் கௌரவ சர்ஜனாக நியமிக்கப்பட்டார். டாக்டர் சந்திரசேகரனுடைய வார்டில் அவர் கூடச் சேர்ந்து நோயாளிகளைக் கவனிக்கவும், அவருடன் ஆப்பரேஷன் தியேட்டரில் ஒன்றாக இருந்து அவருக்கு உதவி செய்யவும் ரேணுகாவுக்குச் சந்தர்ப்பம் ஏற்பட்டது. டாக்டர் சந்திரசேகரன் டாக்டர் ரேணுகா இவர்களுடைய ஒத்துழைப்பு ஆஸ்பத்திரிக்கே நல்ல பெயரைக் கொடுத்தது. டாக்டர் சந்திரசேகரன் ஒரு கேஸை எடுத்துக் கொண்டு அதற்கு ரேணுகாவின் பக்க உதவியும் கிடைத்து விட்டால் அநேகமாக நூற்றுக்கு நூறு பங்கு அந்த நோயாளி, நோய் நீங்கி மிகத் திடகாத்திரத்துடன் ஆஸ்பத்திரியிலிருந்து வெளியேறுவது வழக்கமா யிருந்தது.

ரண சிகிச்சையிலுள்ள நுணுக்கங்களை ஒன்று விடாமல் ரேணுகா, டாக்டர் சந்திர

சேகரனிடமிருந்து கற்றுக் கொண்டாள். மணிக்கணக்காக இருவரும் ஆஸ்பத்திரி வார்டுகளைச் சுற்றிப் பார்த்து அவர்களுடைய பொறுப்பிலிருந்த கேஸ்களைப் பார்வையிட்டு வேண்டியதைச் செய்வதைப் பற்றி ஆஸ்பத்திரியிலுள்ள மற்றச் சிப்பந்திகள் அடிக்கடி புகழ்ந்த வண்ணமிருந்தனர்.

டாக்டர் சந்திரசேகரனுக்கு அப்பொழுது கல்யாணமாகியிருக்கவில்லை. ஆரம்பத்தில் ரேணுகாவின் மேல் விழுந்த அவருடைய அபிமானம் நாளடைவில் காதலாகப் பரிணமித்தது. டாக்டர் சந்திரசேகரனைக் கணவராக அடைந்து விட்டால் அதைவிடத் தன் வாழ்க்கையில் பெரிய அதிர்ஷ்டம் இருக்காது என்று திடமாக நம்பியிருந்தாள் ரேணுகாவும்.

ஒரு நாள் அன்றைய வேலை முடிந்ததும் ரேணுகா என்னுடைய அறைக்குப் பரபரப்பாக ஓடி வந்தாள். வந்ததும் வராததுமாக என் கைகள் இரண்டையும் பிடித்துக் கொண்டு 'பவானி, பவானி! இப்போ உன்னிடம் சந்தோஷகரமான சங்கதி ஒன்று சொல்லப் போகிறேன்' என்றாள்.

'என்ன ரேணு! நீயும் சந்திர சேகருமாகச் சேர்ந்து மற்ற டாக்டர்கள் பிரயோஜனமில்லை என்று கைவிட்டு விட்ட கேஸைப் பிழைக்க வைத்து விட்டீர்களாக்கும்!" என்றேன்.

அதற்கு ரேணுகா 'அதெல்லாம் இப்பொழுது எனக்கு அதிசயமாகப் படுவதில்லை. ஆமாம், பவானி, அவர் எடுத்துக் கொண்ட எந்தக் கேஸ் பழுதாயிற்று, சொல்லு பார்ப்போம்!' என்றாள். அவள் குரலில் பெருமிதம் தொனித்தது. அது நியாயந்தானே!

'சரி, பின்னே என்னதான் விஷயம்!' என்றேன் பொறுமையை இழந்தவள் போல் பாசாங்கு செய்து கொண்டு.

'இல்லை பவானி, நான் சொல்லப் போவது என் சொந்த விஷயம்' என்றாள் என் முகத்தை உற்றுப் பார்த்த வண்ணம்.

நான் அவளுடைய மனதிலிருந்ததை ஊகித்துக் கொண்டு 'நான் உன்னை மிஸஸ் ரேணுகா சந்திர சேகரன் என்று பெயரிட்டு அழைக்க அதிக நாள் காத்திருக்க வேண்டாம், இல்லையா!' என்றேன்.

இதைக் கேட்டதும் ரேணுகாவின் முகம் நாணத்தால் 'குப்' என்று சிவந்தது. ரேணுகா சந்தோஷத்தால் என்னைத் தழுவிக்கொண்டு 'பவானி, நீ எப்படியோ 'எக்ஸ்ரே' எடுத்த மாதிரி என் மனதிலுள்ளதை அறிந்து கொண்டு விட்டாயே!' என்றாள்.



அதைத் தொடர்ந்து அன்று அவளை டாக்டர் சந்திரசேகரன் தனியே சந்தித்து அவளுடைய மனதை அறிந்து கொண்டதைச் சொன்னாள். டாக்டர் சந்திரசேகரனுடன் அவள் நடத்தப் போகும் வாழ்க்கை விதத்தைப் பற்றிக் குதூகலமாக வெகு நேரம் வரை பேசி முடித்தாள். கடைசியாக, 'இதெல்லாம் என்னவோ சரிதான் பவானி, இதற்கிடையில் தலைவிதி எப்படி இருக்கிறதோ' என்றதும் எனக்கு ஆத்திரம் தாங்கவில்லை.

'என்ன ரேணு. இவ்வளவு நாழிகையாக ஒரு நவநாகரிக யுவதி மாதிரிபேசிக் கொண்டிருந்தாய். முடிவில் பழைய மாதிரி உன் பத்தாம் பசலிக்குணம் தலைதூக்கி விட்டது போலிருக்கிறது. தலைவிதியாம், தலைவிதி!' என்றேன் ஏளனமாக.

அடுத்த இரண்டு மாதங்களும் ரேணுகா இன்பலாகிரியில் மிதந்த உள்ளத்துடன் கனவு உலகில் நடமாடிக் கொண்டிருந்தாள் என்றுதான் எனக்குத் தோன்றியது. காதல் வசப்பட்ட பிரகிருதிகள் எப்படி யெல்லாம் நடந்து கொள்ளுவார்கள் என்று நான் காவியங்களிலும் கதைகளிலும் படித்திருந்ததை ரேணுகாவின் விஷயத்தில் நிதர்சனமாகக் காணும் சந்தர்ப்பம் எனக்கு ஏற்பட்டது.

காரணமின்றி அவர்கள் கலியாணத்தை ஒத்திப் போட்டுக்கொண்டு போகிறார்களே என்று எனக்கு அடிக்கடி தோன்றும். ஒரு நாள் நான் ரேணுகாவிடம் இதைப்பற்றிப் பிரஸ்தாபித்தேன். அதற்கு அவள் 'அவர் அனேகமாக இன்னும் இரண்டு மாதத்தில் ஒரு 'நர்ஸிங் ஹோம்' ஆரம்பிக்க உத்தேசித்திருக்கிறார். அதில் அவர் கவனம் செலுத்திக் கொண்டிருக்கிறார். ஆனால் என்னை அவர் மறந்து போகவில்லை என்பது அவர் என்னிடம் பழகும் விதத்தில் இருந்து தெரிகிறது' என்று சமாதானம் சொன்னாள்.

இதற்கு அடுத்த வாரம் ஒரு நாள் பிற்பகல் ரேணுகா என் அறைக்கு வந்தாள். 'பவானி, இன்று இரவு நானும் அவரும் சேர்ந்து ஒரு நாடகத்துக்குப் போக ஏற்பாடு செய்திருக்கிறோம். நாடகத்தில் கதாநாயகனாக வருபவன் அவரிடம் ஒரு சமயம் சிகிச்சை செய்து கொண்டானாம். அவன்

அவரை இன்று கட்டாயமாக நாடகத்துக்கு வரும்படி கேட்டுக் கொண்டாளும். அவரும் சம்மதித்து விட்டார். என்னையும் கூட வரச் சொன்னார்' என்றாள்.

'சரி, சந்தோஷமாகப் போய் விட்டு வருவது தானே!' என்றேன்.

ரேணுகா சற்று நேரம் மௌனமாயிருந்தாள். பிறகு, 'அது சரி. பவானி! இந்த நாடகத்தின் பெயரைக் கேட்டாலே என் மனதுக்கு அச்சானியமாகப் படுகிறது. நாடகத்தின் பெயர் 'உடைந்த உள்ளமாம்'! இருந்து இருந்து முதல் முதலாக இந்த நாடகத்துக்கா நானும் அவரும் சேர்ந்து போகவேண்டும்!' என்றாள்.

'என்ன ரேணு, வேண்டாததையெல்லாம் கற்பனை செய்து கொண்டு மனசை வீணாக அலட்டிக் கொள்ளுகிறாய். நாடகத்தின் பெயரை அதிலிருக்கும் கதையை ஒட்டித்தான் வைக்கலாமே தவிர, நீயும் டாக்டர் சந்திரசேகரும் முதல் முதலாக அதைப் பார்க்கப்போகிறீர்கள் என்பதற்காக மாற்ற முடியுமா என்ன!' என்றேன் கேலியாக.

ரேணுகா மறுபடியும் 'சரி, ஒருவரையும் குற்றம் சொல்லுவதில் பயனில்லை. இந்த நாடகத்திற்குத்தான் நாங்கள் சேர்ந்து போகவேண்டும் என்று விதியிருந்தால் அதை எப்படி மாற்ற முடியும்! எனக்கு என்னவோ அதற்குப் போகாமல் இருப்பதுதான் மேல் என்று தோன்றுகிறது. ஆனால் முன் யோசனையில்லாமல் அவரிடம் நான் கூட வருவதாகச் சொல்லிவிட்டேனே என்றுதான் பார்க்கிறேன்' என்றாள்.

'ரேணு, உன்னை விட்டு இந்த விதி என்ற கிறுக்கு நீங்கும்வரை உனக்கு விமோசனமிருக்கிறதாக எனக்குத் தெரியவில்லை' என்றேன் அலுப்புடன்.

ரேணுகா என்னிடம் விடை பெற்றுக் கொண்டு அவள் அறைக்குத் திரும்பினாள். அன்றைக்கு டாக்டர் சந்திரசேகருடன் அந்த டிராமாவுக்குப் போகவேண்டாம் என்று ரேணுகா நினைத்தது கடைசியில் நிறைவேறி விட்டது. ஆனால் அதற்குக் காரணமாயிருந்த சம்பவம் அத்துடன் நிற்காமல் அவள் வாழ்க்கையிலேயே ஒரு புயலைக் கிளப்பிவிட்டது.

## 2

அன்று மாலை ஆறரை மணிக்கு நாடகம் ஆரம்பமாவதாக இருந்தது. அதற்கு அரை மணி முன்னதாக அவளுடைய அறைக்கு வந்து அவளை டாக்டர் சந்திரசேகரன் அழைத்துக் கொண்டு போவதாக இருந்த ஏற்பாட்டை ஏற்கனவே என்னிடம் ரேணுகா தெரிவித்திருந்தாள். ஆனால் மணி ஆறு அடித்ததும் ரேணுகா நான் சற்றும் எதிர்பாராது இருக்கும் போது என்னுடைய அறைக்கு வந்தாள். 'என்ன ரேணு, டாக்டர் சந்திரசேகரனை உன்னுடைய இருப்பிடத்திற்கு ஆறு மணிக்கு வரச்சொல்லி விட்டு நீ இப்போது ஏன் இங்கே வந்திருக்கிறாய்!' என்றேன்.

'என்னை அவர் அங்கே காணாவிட்டால் தானாகவே இங்கே தேடிக் கொண்டு வருகிறார்' என்றாள்.

'சரி, கல்யாணமாவதற்கு முன்பே அவர் உன்னை இந்தமாதிரித் தேடி அலையும்படி வைக்கும் நீ கல்யாணமான பின் அவரை என்ன பாடெல்லாம் படுத்தப் போகிறாயோ!' என்று கூறினேன்.

'பவானி, உன்னைப் போன்ற வெகுளியை நான் இந்த உலகத்திலே வேறெங்கும் பார்த்ததில்லை. வெளுத்ததெல்லாம் பால் என்று நம்புகிறாய். டாக்டர் சந்திரசேகரன் உனக்கு ஒருபடி மேலே போய் விட்டார். அவரை நான் என்னவோ காதலிப்பதாகவும் அவரையே கல்யாணம் செய்து கொள்ளத் துடித்துக் கொண்டிருப்பதாகவும் நினைத்து மனக் கோட்டை கட்டிக் கொண்டிருக்கிறார். அவரிடம் நன்றாக வேலை கற்றுக் கொள்ள வேண்டுமென்று இந்தமாதிரி நாடகம் போட்டேனே தவிர வேறொன்றுமில்லை. பாவம், நீ என்னை எப்படி முழுவதும் நம்பி ஏமாந்து போனாயோ, அதே மாதிரி ஏமாற்றம்தான் அவருக்கும் காத்திருக்கிறது' என்றாள்.

ரேணுகாவின் பேச்சைக் கேட்டதும் என் காதுகளையே என்னால் நம்ப முடியவில்லை. என் தலை கிறுகிறுத்தது. இவ்விதமெல்லாம் பேசுவது ரேணுகா தானா என்று ஒரு கணம் ஆ[illegible] முற்றேன். அவள் மனசை நிச்சயமாக அறிந்திருக்கிறோம் என்ற



என் எண்ணம் அதே விநாடியில் தவிடு பொடியாகப் போயிற்று.

ஆனால் எல்லாவற்றிற்கும் மேலாக என்னை அப்பொழுது பயப்படச் செய்தது வேறொரு விஷயம். எப்பொழுதுமே டாக்டர் சந்திரசேகரன் என்னைப் பார்க்க வரும்போது யாராவது என்னுடன் பேசிக் கொண்டிருந்தால் அறை வாசலில் பொருத்தியிருந்த அரைக் கதவுகளுக்கு வெளியே நின்று கொண்டு உள்ளே பேச்சு முடிந்தபிறகு கதவைத் தட்டி என் அனுமதியுடன்தான் உள்ளே வருவார். கொஞ்சம் நேரமாகும் போலிருந்தால் அறையின் வெளியே போட்டிருக்கும் நாற்காலியில் உட்கார்ந்திருப்பார். அதேமாதிரி அன்றும் அவர் வழக்கமாக அணியும் சத்தம் செய்யாத ரப்பர் பூட்சுகள் போட்டுக்கொண்டு வந்து, என் அறைக்கு வெளியிலிருந்து ரேணுகாவின் பேச்சை தற்செயலாகக் கேட்டிருந்தால் என்ன ஆவது என்று பயந்து கொண்டிருந்தேன்.

அதற்குமேல் என்னால் அங்கே உட்கார்ந்திருக்க முடியவில்லை. குழம்பிய மனத்தோடு மெதுவாக எழுந்திருந்து கதவைத் திறந்து வெளியே பார்த்தேன். நான் எதிர்பார்த்தது போலவே டாக்டர் சந்திரசேகரன் வெளியிலிருந்த நாற்காலியிலிருந்து அப்பொழுதுதான் எழுந்திருந்து வேகமாகத் திரும்பிப் போய்க் கொண்டிருந்தார். சந்தேகமே யில்லை. ரேணுகா பேசிய ஒவ்வொரு வார்த்தையும் அவர் காதில் விழுந்திருக்கும்! என்னுடைய நெஞ்சு திக் திக்என்று அடித்துக் கொண்டது. எனக்கிருந்த கலக்கத்தில் ஒன்றும் தோன்றாதவளாய்ச் சந்திரசேகரன் என் கண் பார்வையிலிருந்து மறையும்வரை பார்த்துக் கொண்டிருந்து விட்டு அறைக்குள் திரும்பினேன்.

உள்ளே வந்ததும் ரேணுகாவிடம் 'ரேணுகா, டாக்டர் சந்திரசேகரன் நாம் பேசிக் கொண்டிருந்ததை நிச்சயமாகக் கேட்டிருக்க வேண்டும். அநியாயமாக உன்னை நம்பியிருந்த அவருக்குத் துரோகம் செய்து விட்டாயே! என்ன இருந்தாலும் உனக்கு இவ்வளவு நெஞ்சழுத்தம் ஆகாது' என்றேன் சற்றுக் கடுமையான குரலில்.

ரேணுகா அசிரத்தையாக 'என்றைக்காவது ஒருநாள் உண்மை வெளிப்பட்டுத்தானே ஆக வேண்டும்!' என்று சொல்லி விட்டு விறு விறு என்று தன் அறைக்குப் போய்விட்டாள்.

ரேணுகாவின் அன்றைய நடத்தை எனக்குப் பெரும் புதிராகவே இருந்தது. அவள் சாதாரணமாக அதற்கு முன் அவ்வளவு இரைந்து என்னிடம் பேசியதில்லை. ஒருவேளை அவள் என்னிடம் பேசினது டாக்டர் சந்திரசேகரனின் காதில் விழவேண்டுமென்ற நோக்கத்துடனேதான் பேசினளோ என்று கூட எனக்குச் சந்தேகம் ஏற்பட்டு விட்டது!

அன்று இரவு சாப்பாடானதும் வழக்கம் போல் ரேணுகாவின் அறைக்குப் போனேன். அங்கே நான் கண்ட காட்சி என்னைத் துணுக்குறச் செய்தது. ரேணுகா தலையணையில் முகத்தைப் புதைத்துக் கொண்டு விக்கி விக்கி அழுது கொண்டிருந்தாள். நான் அவள் முகத்தைத் திருப்பி 'என்ன ரேணு! நீ இன்று செய்யும் ஒவ்வொரு காரியமும் எனக்கு விபரீதமாகப் படுகிறது. அதிருக்கட்டும்; இப்பொழுது எதற்காக இந்தக் கோலம்!' என்றேன்.

'பவானி, அவரைக் கலியாணம் செய்து கொள்ளாமல் நான் எப்படி உயிர் வாழப் போகிறேன்' என்றாள் விம்மல்களுக்கிடையே.

'ரேணு, உனக்குச் சரியான பைத்தியம்தான் பிடித்திருக்கிறது. கொஞ்ச நேரத்திற்கு முன் என் அறையில் நீ வந்திருந்தபோது நீ சொன்னது என்ன! இப்போது என்ன பேசுகிறாய்!' என்றேன்.

அவள் கண்களிலிருந்து கண்ணீர் மாலை மாலையாகப் பெருகிக் கொண்டிருந்தது. 'பவானி, எனக்கு ஒரு பெரிய சோதனை. இதோ பார்!' என்று சொல்லித் தலையணைக்கடியில் வைத்திருந்த கடிதம் ஒன்றை என்னிடம் கொடுத்தாள். அந்தக் கடிதம் அன்றைய சாயங்காலம் ஐந்து மணித் தபாலில் வந்திருந்தது. உள்ளூரிலிருந்துதான் தபால் மூலம் அனுப்பப்பட்டிருந்தது; அதைப் பிரித்து வாசித்தேன்.

அதில் பின்வருமாறு எழுதியிருந்தது.

*என் அன்பிற்குரிய சகோதரி, டாக்டர் ரேணுகா அவர்களுக்கு வணக்கம் தெரிவித்து அபலை அருணா எழுதிக் கொண்டது:*

*முன் பின் தெரியாத உங்களைச் சகோதரி என்று அழைத்ததற்காக என்னை மன்னித்து விடுங்கள். தாங்கள் டாக்டர் சந்திரசேகரன் அவர்கள் மேல் காதல் கொண்டிருப்பதாகவும் அவரையே கூடிய சீக்கிரம் கணவனாக அடையப் போவதுமான ஒரு தகவல் எனக்குச் சில நாட்களுக்கு முன்பு தான் கிடைத்தது. அது உண்மையாயிருக்குமானால் தாங்கள் என்னுடைய நிலைமையையும் அறிந்து கொண்டு ஒரு முடிவுக்கு வருவது நல்லது. நான் டாக்டர் சந்திரசேகரன் அவர்கள் மாமாவின் மகள். எனக்கு முறைப்படி அவர் கணவனாக வேண்டும். இதை மனதில் வைத்தே காலஞ்சென்ற என் தகப்பனார் டாக்டர் சந்திரசேகரன் அவர்களுக்கு வைத்தியப் படிப்புச் செலவு முழுவதையும் கொடுத்து உதவி, டிஸ்பென்ஸரி ஒன்றும் வைத்துக் கொடுத்தார். இன்று அவர் அடைந்திருக்கும் பெயர், புகழ், அந்தஸ்து, வருமானம் எல்லாவற்றிற்கும் காரணம் என் தகப்பனார்தான். என் தகப்பனார் உயிரோடிருக்கும் வரை டாக்டர் சந்திரசேகரன் என்னையே கலியாணம் செய்து கொள்ளப் போவதாக அடிக்கடி சொல்லிக் கொண்டிருப்பார். என்னை அன்பும் ஆர்வமும் கலந்த பார்வையோடு நோக்குவார். ஆனால் நீங்கள் அவருடன் ஆஸ்பத்திரியில் வந்து பழகியது முதல் நிலைமை மாறிவிட்டது. முதலில் காரணம் தெரியாமல் தவித்தேன். ஆனால் சமீபத்தில் நீங்கள் அவருக்கு எழுதியிருந்த கடிதங்களை அவருக்குத் தெரியாமல் பார்த்த பின்புதான் எனக்கு ஏற்பட்டிருக்கும் ஏமாற்றம் தெரிந்தது.*

*என்னை நீங்கள் உங்கள் சகோதரியாகப் பாவித்து எனக்கு உரியவரை என்னிடமே திரும்பும்படி செய்ய உங்களை ஒரு முறையல்ல; பல்லாயிரம் முறை கேட்டுக் கொள்ளுகிறேன். நீங்கள் காட்டும் கருணையை என் உயிருள்ள அளவும் மறக்கமாட்டேன்.*

இந்த அபலையின் வாழ்வில் சூழவிருக்கும் இருளை உங்களுடைய தியாக விளக்கு நிச்சயமாகப் போக்கி இல்லற ஒளியை வீசச் செய்யும் என்ற நம்பிக்கையுடன் இந்த வேண்டுகோளை உங்களுக்கு அனுப்புகிறேன்.

தங்கள் சகோதரி,

அநசூயா.

இந்தக் கடிதத்தைப் படித்து முடித்ததும் தான் எனக்கு அன்று மாலை என் அறையிலிருந்தபோது, ரேணுகா அவ்விதமாகப் பேசியதின் காரணத்தை ஒருவாறு ஊகிக்க முடிந்தது.

ரேணுகா கொஞ்சம் சாந்தமடைந்ததும் நான் 'ரேணு, நீ இந்தப் பெண்ணுக்கு உதவி செய்ய முன் வந்ததை என்னால் பாராட்டாமலிருக்க முடியவில்லை. ஆனாலும் நீ டாக்டர் சந்திர சேகரனிடம் இந்தக் கடிதத்தையே காட்டி உன் தீர்மானத்தை மாற்றிக் கொண்டதாகத் தெரிவித்திருந்தால் விஷயம் ரொம்ப சுருக்காகப் போயிருக்குமே' என்றேன்.

அதற்கு ரேணுகா, 'பவானி, நான் இந்தக் கடிதத்தை டாக்டர் சந்திரசேகரனிடம் காட்டியிருந்தால், நீ எதிர்பார்க்கும் பலனுக்கு நேர் மாறான பலன்தான் ஏற்பட்டிருக்கும். அவருடைய விருப்பத்திற்கு எதிரிடையாக நிற்கும் அந்தப் பெண்ணின்மேல் அன்புக்குப் பதிலாக அவருக்கு வெறுப்புத்தான் ஏற்படும். ஒரு வேளை விபரீதமாக அவளைக் கலியாணம் செய்து கொள்ளாமலேயே இருந்தாலும் இருந்து விடுவார். அப்படிச் செய்து கொண்டாலும் அவளுக்காகத் தான் ஒரு பெரிய தியாகம் செய்து விட்டதாக நினைத்து அவளை அலட்சியமாக நடத்தினாலும் நடத்துவார். இதையெல்லாம் எண்ணித்தான் என்மேல் அவருக்கு வெறுப்பு ஏற்படும் வகையில் நடந்து கொண்டேன். நான் சொன்னதை யெல்லாம் கேட்டு மனம் மாறி அவருடைய மாமாவின் பெண்ணையே கலியாணம் செய்து கொள்ள அவர் முன் வரலாம். அதனால் தடைபட்டிருந்த அவருடைய அன்பு துளிர் விடலாமல்லவா!' என்றாள்.

ரேணுகாவின் பதிலைக் கேட்டதும் என் உடல் சிலிர்த்தது. அவள் உண்மையிலேயே ஒரு உத்தம ஸ்திரீ ரத்னம் என்பதை அவளுடைய மனப்பண்பு அன்று நிரூபித்து விட்டது. அவளுடைய நட்பு எனக்குக் கிடைத்ததை எண்ணி என் உள்ளம் சொல்லொணா உவகை யடைந்தது.

ரேணுகா ஒரு முடிவுக்கு வந்ததும், அப்பொழுதே அநசூயாவுக்கு ஒரு கடிதம் எழுதினாள். தான் அந்த நிமிஷத்திலிருந்து அவளுடைய உரிமையாகிய டாக்டர் சந்திரசேகரனுடைய வாழ்க்கையிலிருந்து விலகிக்கொண்டு விட்டதாக எழுதினாள். எழுதிய சூட்டோடு ஆஸ்பத்திரிக்கு அருகிலிருந்த தபால் பெட்டியில் சேர்த்து விட்டு அறைக்குத் திரும்பினாள். திரும்பியதும் அநசூயாவிடமிருந்து வந்த கடிதத்தைக் கிழித்துப் போடப் போனாள். அப்போது எனக்கு என்னவோ தோன்றியது; நான் அவளிடம் 'ரேணு, அந்தக் கடிதத்தை ஏன் கிழிக்கிறாய்! உன் பெட்டியிலேயே ஒரு மூலையில் போட்டு வை' என்றேன். என் வார்த்தையைத் தட்ட முடியாமல் அந்தக் கடிதத்தை அவள் பெட்டியிலிருந்த பையில் சேர்த்து வைத்துக் கொண்டாள்.

## 3

மறு நாள் காலை நான் ஆஸ்பத்திரிக்குப் போனபோது, டாக்டர் சந்திரசேகரன் ஆஸ்பத்திரிக்கு வரவில்லை. அன்று அவர் லீவு போட்டிருந்தார். ரேணுகாவே அவர் பார்க்க வேண்டிய கேஸ்களைப் பார்வையிட்டாள். அன்று மனதிலிருந்த கொந்தளிப்பு அவள் முகத்தில் அவளையும் மீறி நிழலாடியது. அன்று அலுவல் முடிந்து சுமார் இரண்டு மணிக்கு ஆஸ்பத்திரியிலிருந்து என்னுடைய அறைக்கு வந்தேன். ரேணுகா கொஞ்ச நேரம் கழித்து என்னைத் தேடிக் கொண்டு வந்தாள். வந்ததும் என்னிடம் 'பவானி, என் மனது இருக்கும் நிலைமையில் வேலையைச் சரியாகச் செய்ய முடியாது போலிருக்கிறது. வெளியூர் எங்கேயாவது போய்ச் சிலநாள் தங்கிவிட்டு வரலாமென்றிருக்கிறேன். நாளை முதல் பதினைந்து நாட்களுக்கு லீவு போட்டிருக்கிறேன். பங்களூருக்குப் போவதாக உத்தேசித்திருக்கிறேன்' என்றாள்.

அதுவரை எந்த ஊருக்குப் போனாலும் நானும் அவளும்தான் சேர்ந்து போவது வழக்கம். ஆனால் இந்தத் தடவை அவள் தனிமையை விரும்பினாள் என்பதை அவள் என்னைத் தன்னுடன்கூட வரும்படி அழைக்காததிலிருந்தே ஊகித்துக் கொண்டேன். ஒரு வேளை அவள் மனோ நிலைமை அவளுடைய தனிமையினால் தெளிவடைவதாக இருந்தால் அதற்கு இடையூறாக நிற்பானேன் என்று எண்ணி அவளை அடுத்த நாள் ரயில்வே ஸ்டேஷனுக்குப் போய்ப் பங்களூருக்கு வழியனுப்பிவிட்டு வந்தேன்.

அடுத்த நாள் முதல் டாக்டர் சந்திரசேகரன் வேலைக்கு வந்தார். அவருக்கு உள்ள அலுவல்களைக் கவனித்தார். வேலை முடிந்ததும் வீட்டுக்குத் திரும்பினார். ஒருநாளாவது அவருடன் கூட ஒத்தாசைக்கு ரேணுகா இல்லாததை அவர் பொருட்படுத்தியதாகத் தெரியவில்லை எனக்கு.

இதற்கிடையில் பங்களூரிலிருந்து ரேணுகா எனக்குக் கடிதம் எழுதாமலிருந்தது கவலையாயிருந்தது. பதினைந்து நாள் கழிந்ததும் ரேணுகா திரும்பி வேலைக்கு வருவாள் என்று எதிர்பார்த்திருந்த எனக்கு ஏமாற்றம் தான் மிஞ்சியது. தன்னுடைய வேலையை ராஜிநாமா செய்து விட்டதாக எங்கள் ஆஸ்பத்திரி பிரதம அதிகாரிக்குப் பங்களூரிலிருந்தே ரேணுகா கடிதம் போட்டிருந்தாள்.

அன்று மாலைத் தபாலில் ரேணுகாவிடமிருந்து என் பெயருக்குக் கடிதம் வந்திருந்தது. அதை ஆவலோடு பிரித்துப் பார்த்தேன். அதில் அவள் பங்களூரிலிருந்து புறப்பட்டு அவள் மனம் போகிற போக்கில் பல ஊர்களுக்குப் போகப் போவதாக எழுதியிருந்தாள்.

ஒவ்வொரு நாளும் ரேணுகாவிடமிருந்து கடிதம் வரும் என்று எதிர்பார்த்து ஏமாந்து போவது எனக்குச் சகஜமாகி விட்டது.

வாழ்க்கையில் எனக்கும் அலுப்புத் தட்டி விட்டது. நாலைந்து மாதம் கழித்து என் வேலையை ராஜிநாமா செய்துவிட்டு, ரேணுகாவைப் போலவே நானும் வட இந்தியாவிலுள்ள என் பந்துக்களைப் பார்த்துக்கொண்டு வருவது என்று திட்டம் போட்டுக்கொண்டு கிளம்பினேன்.

## 4

கிட்டத்தட்ட இரண்டு வருஷம் இந்த நாடோடி வாழ்க்கையை நடத்திவிட்டு நான் பம்பாய் வந்து சேருவதற்கும் நாடு இரண்டாகப் பிரிக்கப்பட்டு, பஞ்சாபிலிருந்தும் சிந்துவிலிருந்தும் எண்ணற்ற அகதிகள், அதிலும் முக்கியமாக, பெண்டிரும் குழந்தைகளும் சகிக்க முடியாத துன்பங்களுக்கு உள்ளாகி உள்ளத்திலும் உடலிலும் நோயுற்றுப் பம்பாய் மாகாணத்திற்குள் நுழைவதற்கும் சரியாக இருந்தது. அகதிகளின் நிலைமையில் அநுதாபம் கொண்ட பரோபகார சித்தம் படைத்த பணக்காரர்கள் பலர், ஒன்று சேர்ந்து அகதிகள் தங்குவதற்குப் பல முகாம்கள் அமைத்துக் கொடுத்து உண்ண உணவு, உடுக்க உடை, இருக்க இடம் இவ்வளவுக்கும் தங்களால் இயன்ற வரை உதவி செய்த வண்ணமாயிருந்தனர். இந்த முகாம்களிலிருக்கும் நோய்வாய்ப் பட்டிருந்த அகதிகளுக்குச் சிகிச்சை அளிக்கச் சொற்ப சம்பளத்தில் சேவை செய்ய வைத்தியர்களை முன்வரும்படி வேண்டுகோள் விடுத்த வண்ணமிருந்தனர் அந்த முகாம்களை நிறுவியவர்கள். இந்தச் சந்தர்ப்பத்தைப் பயன் படுத்திக் கொண்டு, என்னுடைய பெயரைப் பதிவு செய்துவிட்டு வந்து அடுத்த வாரத்திலேயே வேலையை ஏற்றுக் கொண்டேன். சுமார் ஒருமாத காலம் கழிந்தது. அன்றொரு நாள் எனக்கு மேலதிகாரியாயிருந்த பெரிய டாக்டர் அடுத்த நாள் முதல் என்னைப் பம்பாய் நகருக்கு வெளியேயிருந்த ஒரு முகாமிற்கு மாற்றியிருப்பதாகவும், அன்று மாலை என்னிடமிருந்து வேலையை ஏற்றுக்கொள்ள வேறொரு லேடி டாக்டர் வரப் போவதாகவும் தெரிவித்தார்.

அன்று மாலை நான் விட்டுப் போகும் ஸ்தானத்தைப் பூர்த்தி செய்ய வந்தவள் வேறொருவருமில்லை. டாக்டர் ரேணுகாவே தான்!

மூன்று வருஷப் பிரிவுக்குப் பின் நாங்கள் சந்தித்ததும் நாங்கள் இருப்பது பொது ஸ்தலம் என்பதையும் மறந்து ஒருவரையொருவர் தழுவிக் கொண்டு கண்ணீர் உகுத்தோம்.

டாக்டர் ரேணுகா, அவள் பங்களூரிலிருந்து புறப்பட்டு ஊர் ஊராகச் சுற்றிவிட்டுக் கடைசியாகப் பம்பாய்க்கு வந்து, என்னைப் போலவே ஒரு மாதத்திற்கு முன் பம்பாய்க்கு இருபது மைல் தள்ளியிருந்த அகதி முகாம் ஒன்றில் வேலை ஏற்றுக் கொண்டதாகச் சொல்லிவிட்டு, 'பவானி, என்னைப்பற்றி ஒரு சந்தோஷகரமான சமாசாரம்' என்றாள்.

'என்ன!' என்றேன் ஆவலோடு.

'நானும் அவரும் நேற்று பம்பாயிலேயே கலியாணம் செய்து கொண்டு விட்டோம். இன்று அவர் அவசர அலுவலாகப் பூனா வரை போயிருக்கிறார். இரண்டு நாளைக்கு முன் தான் அவரைப் பார்த்தேன். உன்னுடைய விலாசம் அவருக்குத் தெரியவில்லை. அதனால் தான் இது சம்பந்தமாக உனக்கு முன் கூட்டியே தெரிவிக்க முடியவில்லை' என்றாள்.

'நடந்த வரைக்கும் ரொம்ப சந்தோஷம். 'அவர்' என்றால் டாக்டர் சந்திரசேகரன் தானே!' என்றேன் வேண்டுமென்றே.

'ஆமாம். எப்பொழுதுமே உனக்கு என்னைக் கேலி செய்யா விட்டால் பொழுதே போகாது!' என்றாள் ரேணுகா சிணுங்கிக் கொண்டு.

அவள் மேலும் தொடர்ந்து, 'பவானி, அவரும் நம்மைப் போல் ஆறு மாதத்திற்கு முன் அவர் இருந்த வேலையை விட்டு விலகி தேச சஞ்சாரத்தில் இறங்கி விட்டாராம். என்னை இரண்டு நாளைக்கு முன் விக்டோரியா டெர்மினஸில் சந்தித்தார். அவரைக் குசலம் விசாரித்து விட்டுக் கடைசியில் அவர் மனைவி முதலியவர்கள் சௌக்கியமா என்று கேட்டு வைத்தேன். அதற்கு அவர், நான் அவரை விட்டுப் பிரிந்த பின் அவருடைய மாமாவின் பெண் அசூயாவைக் கலியாணம் செய்து கொள்ளலாம் என்ற தீர்மானத்துக்கு வந்து கொண்டிருக்கும் சமயம் அசூயாவே அவர் முன் வந்து, எனக்கும் அவருக்கும் ஒரு காலத்திலிருந்த சிநேகத்தை எடுத்துக் காட்டி அவரைக் கலியாணம் செய்து கொள்ளப் போவதில்லை என்று சொல்லிவிட்டு, வேறொரு உத்தியோகஸ்தரைக் கலியாணம் செய்துகொண்டு விட்ட தகவலைத் தெரிவித்தார். இதைக் கேட்டதும் நான் அவரை என் இருப்பிடத்திற்கு அழைத்துக் கொண்டு போய் நீ பத்திரமாக வைக்கச் சொல்லியிருந்த அசூயா எனக்கு எழுதிய கடிதத்தை எடுத்துக் காட்டி, அதன்பின் நான் நடந்து கொண்ட விதத்திற்குக் காரணத்தையும் எடுத்துச் சொன்னேன். உண்மை நிலைமையை அவர் அறிந்ததும் தாமதிக்காமலேயே பம்பாயில் எங்கள் சிநேகிதர்கள் முன்னிலையில் ஆடம்பரமில்லாமல் எங்களுக்குக் கலியாணம் நடந்தது' என்று முடித்துவிட்டு, 'ஆமாம், இப்பொழுது கேட்கிறேன். தலைவிதி குறுக்கிடாமல் நாங்கள் ஒருவரை ஒருவர் சந்தித்துக் கலியாணம் செய்து கொண்டிருக்க முடியுமா! சொல்லு பார்ப்போம்' என்றாள்.

'என்ன ரேணுகா, இதில் தலைவிதி என்ன இருக்கிறது! உங்களில் ஒருவருக்கு மற்றவர் மேல் உண்மையான அன்பு இருந்தது. கவிதை பாஷையில் களங்கமற்ற காதல் என்று வேண்டுமானால் வைத்துக்கொள். அதனால் உங்கள் எண்ணம் நிறைவேறிற்று' என்றேன்.

ரேணுகா 'அதிருக்கட்டும், நீ சொல்லுகிறபடி வைத்துக் கொண்டால் கதைகளில் வரும் லைலா—மஜ்னு, ரோமியோ ஜூலியட் இவர்களின் காதல் ஏன் வெற்றி யடையவில்லை! அவர்களுடைய காதலின் தூய்மைக்கு என்ன குறைவு இருந்தது!' என்றாள்.

ஒரு கணம் யோசித்தேன். பிறகு 'ரேணுகா, உன்னிடம் பேசி என்னால் ஜயிக்க முடியாது. உங்கள் இருவருடைய வாழ்க்கையிலும் எதிர்பாராத சில சம்பவங்கள் நிகழ்ந்தன. அது ஒருவேளை உங்கள் இருவரையும் மீறிய ஒரு சக்தியின் காரணமாயிருக்கலாம்' என்றேன்.

'போகட்டும்; இது மட்டுமாவது ஒப்புக் கொண்டாயே. அதுவே போதும்' என்றாள் ரேணுகா சிரித்துக்கொண்டே.

கல்கி பாப்பா மலர்

# போஸ்டாபீஸ் விளையாட்டு

சாமா

ராமு:—இந்த விளையாட்டிற்கு நிறையக் கடிதங்கள் வேண்டும். எங்கப்பாவுக்கு வந்த கடிதங்களெல்லா வற்றையும் கொண்டு வந்து விளையாடலாம்.

குண்டுமணி:—ராமுவே போஸ்ட் மாஸ்டராக இருக்கட்டும். நானும் சீனுவும் பட்டிக்காட்டானாக இருக்கிறோம்.

கிட்டுவும், பட்டுவும்:—நாங்கள் தபால்காரர்களாக இருக்கிறோம்.

பட்டு:—நான் வேண்டுமானால் ஒரு பாட்டியாக இருக்கிறேன்.

சங்கர்:—நான் ஒரு பிடில் வித்வான்.

போஸ்ட் மாஸ்டர்:—இது என்ன இந்தக் கார்டில் ஒன்றுமே எழுதாமல் விலாசம் மட்டும் எழுதி இருக்கிறது. முத்திரை போட்டுவிட்டாயே!

கிட்டு:—ஒரு பாட்டி தன் பேரனுக்கு 'அடிக்கடி கடிதம் போட்டுக் கொண்டு இரு. எழுதுவதற்கு ஒன்றும் சமாசாரம் இல்லாவிட்டாலும் போட்டுக் கொண்டு இரு' என்று சொன்னாளாம். அதற்குப் பேரன் இப்படிச் செய்திருக்கிறான்!

போஸ்ட் மாஸ்டர்:—'ரிப்ளை கார்டு' வேறே வைத்து இருக்கிறதே?

கிட்டு:—பாட்டி திருப்பி இதேமாதிரி பேரனுக்கு அனுப்பிவிடுகிறாள்.

போ. மா:—சரி. 'தபால் போய்ச் சேரா நல்லூ'ருக்குக் கடிதங்களை எடுத்துப் போய்ச் சேர்த்துவிட்டு வா.

பட்டு:—எனக்கு ரொம்ப வயசாகி விட்டது. ரொம்ப தூரம் நடக்க முடியவில்லை. அந்தத் தபால்களைப் போஸ்டிலேயே அனுப்பிவிடுங்களேன்.

போ. மா:—அந்த ஊருக்குப் போஸ்டாபீஸ் கிடையாது, அப்பா!

பட்டு:—இந்த போஸ்டாபீசை அங்கு கொண்டு போய் நடத்துங்களேன்.

போ. மா:—பேஷ்! இது நல்ல வயசான யோசனை! சரி, நீ ஏன் அந்தக் கவுண்டர் வீட்டுத் தபாலை அவரிடம் கொடுக்காமலே இருக்கிறாய்?

பட்டு:—அங்கே போனால் அவர் கண்டபடி திட்டுகிறார். போஸ்டாபீஸ் ஒழிக என்று கத்துகிறார்! போகவே பயமாயிருக்கிறது.

போ. மா:—ஏன் அப்படி?

பட்டு:—மணியார்டர் அவருக்குக் கொண்டு போவதையே விட்டு விட்டேனாம். மணியார்டர் கொண்டு வந்தால் தான் வீட்டுக்குள் விடுவாராம். போனால் நாயை ஏவிமேலே விடுகிறார்......

சங்கர்:—சார், எனக்குத் தபாலில் தந்தி வந்ததா?

போ. மா:—என்ன கேள்வி சார்? தபாலில் போய் எங்கேயாவது தந்தி வருமா?

சங்கர்:—ஓ, பேஷாய் வரும். பிடில் வித்வானாக இருந்தால் வரும்.

போ. மா:—ஓ, ஓ! பிடில் தந்தியா? வரவில்லை போம்! யாரப்பா நீ? நாள் முழுவதும் லெட்டர்களை எட்டிப் பார்த்துக் கொண்டே உட்கார்ந்திருக்கிறாய்?

நாட்டான் (குண்டுமணி):—எனக்கு அட்ரஸே கிடையாதுங்க. விலாசம் இல்லாமல் லெட்டரோ மணியார்டரோ வந்தால் என்னிடம் கொடுங்கள்.

போ. மா:—சரி. நீ போய் வா. போஸ்ட்மேன், நீ என்னப்பா எழுதிக் கொண்டிருக்கிறாய்?

கிட்டு:—பத்திரிகைக்கு ஒரு கதை எழுதினேன். அதனுடன் ஸ்டாம்புகளும் வைத்து அனுப்புகிறேன். கதை பிரசுரமாகாவிட்டால் தயவு செய்து ஸ்டாம்புகளைத் திருப்பி யனுப்பும்படி கடிதம் எழுதுகிறேன்.

போ. மா:—சபாஷ்! இன்று கடிதங்கள் எல்லாவற்றையும் கொடுத்து வந்தாயா?

கிட்டு:—இன்றைக்கு வெளியில் போக வேண்டிய அவசியமே இல்லை. எல்லா லெட்டர்களும் 'போஸ்டு மாஸ்டர் மேற்பார்த்து' என்று வந்திருக்கிறது.

போ. மா:—இது என்ன கூத்து? ஒரு வேலை வீடில்லாமல் திரிபவர்களுக்குத்தான் இருக்கும். சரி வெளியில் போய் வீட்டுக்காக அலைபவர்களை இங்கே அழைத்துக் கொண்டு வா.

(ராமுவின் தகப்பனார் வருகிறார்.)

அப்பா:—ரொம்ப மோசமாப் போச்சு. எல்லாக் கடிதங்களும் எனக்கு வந்தவையல்லவா? கொண்டாங்கடா இப்படி!

ராமு:—அப்பாதான் 'போஸ்ட்மாஸ்டர் மேற்பார்த்து' என்னும் ஆசாமி!



பாப்பா மலர்

# குதிரை வியாபாரி

அக்ஷயம்

## 2. அன்னியூர்ச் சந்தை

இரண்டு நாட்கள் ஆயிற்று. காலையில் எழுந்திருந்ததும் எழுந்திருக்காததுமாக வீரமுத்து சாயபு வைப்போல இடுப்பிலே ஒரு கைலியைக் கட்டிக் கொண்டான். தலையிலே அழகான குல்லா வைத்துக் கொண்டான். முகத்திலே பொய் மீசையும் பொய்த் தாடியும் ஒட்டிக்கொண்டான். அப்புறம் கண்ணாடியை எடுத்துப் பார்த்தான். அவனுக்குத் தன் வேஷம் பூரணத் திருப்தியை அளித்தது. பிறகு வீட்டு முற்றத்திலே வந்து நின்றான்.

சிறிது நேரத்துக்கெல்லாம் கொல்லைப் புறத்திலிருந்து பாட்டி வந்தாள். முற்றத்தில் ஒரு சாயபு நிற்பதைப் பார்த்ததும், "யார் அது?" என்று ஆச்சரியத்துடன் கேட்டாள்.

சாயபு வேஷத்தில் இருந்த வீரமுத்து குரலை மாற்றிக் கொண்டு, "தம்பி வீரமுத்து வரச் சொல்லிற்று. அது வீட்டிலே இருக்குதுங்களா?" என்று கேட்டான்.

"உள்ளே படுத்துத் தூங்கிக்கொண்டிருந்தான். இரு, போய் எழுப்பி வருகிறேன்!" என்று சொல்லிப் பாட்டி அறைக்குள் நுழைந்தாள். "அட, இதென்ன? வீரமுத்துவைக் காணோமே! எங்கேயாவது வெளியே போய்விட்டானா?" என்று சொல்லிக் கொண்டே வெளியில் வந்தாள்.

பாட்டி ஏமாந்துவிட்டதை நினைக்கவே வீரமுத்துவுக்கு அடக்கமாட்டாத சிரிப்பு வந்தது. 'கடகட' வென்று கைகொட்டிச் சிரித்துவிட்டான். பாட்டிக்கு அப்புறம்தான் விஷயம் விளங்கிற்று. "அட தடியா! இதென்ன வேஷம்?" என்றாள்.

"இன்றைக்குக் குதிரை விற்கச் சந்தைக்குப் போகிறேன். அதற்காகத் தான் இந்த வேஷம். போய் வரட்டுமா?" என்று சொல்லி வீரமுத்து விடைபெற்றுக் கொண்டான்.

பிறகு கொட்டிலுக்குச் சென்று குதிரையை அவிழ்த்துக் கொண்டு வெளியே வந்தான். எந்த ஊர்ச் சந்தைக்குப் போகலாம் என்று ஒரு கணம் யோசித்தான். உடனே அவனுக்கு அன்னியூர்ச் சந்தையின் நினைவு வந்தது. அடுத்த கணம் குதிரை மீது ஏறி உட்கார்ந்து கொண்டு பல காத மைல்களுக் கப்பாலிருந்த அன்னியூர்ச் சந்தைக்குப் புறப்பட்டான்.

அன்னியூர்ச் சந்தை வியாழக்கிழமை தோறும் கூடுவது வழக்கம். குன்னியூரைக் காட்டிலும் பெரிய சந்தை அது. வீரமுத்து போயிருந்த அன்று அங்கே ஏராளமான குதிரைகள் வந்திருந்தன.

சாயபு வேஷத்தில் வீரமுத்துவும் தன் குதிரையை ஒரு பக்கமாக நிறுத்தி விட்டு நின்று கொண்டிருந்தான். அப்பொழுது ஒவ்வொரு குதிரையாகப் பார்த்துக் கொண்டு ஒரு பஞ்சாபி கனவான் அந்தப் பக்கம் வந்தார். அவர் தம் கையிலே ஒரு அழகான பச்சைக் கிளியை வைத்திருந்தார். அந்தக் கிளி, 'ரங்க ரங்க ரங்கா! யாரடா அவன் கெட்ட பயல்?' என்று கேட்டுக் கொண்டே அவருடைய கையில் வெகு ஒய்யாரமாக உட்கார்ந்திருந்தது.

வீரமுத்துவின் குதிரைக் கருகில் வந்ததும் அந்தப் பஞ்சாபிக் கனவான் ஒரு கணம் ஸ்தம்பித்து நின்றார். வீர

முத்துவுக்கு அவர் தன் குதிரையின் அழகையும் கம்பீரத்தையும் கண்டு ஸ்தம்பித்து நிற்பதாகவே தோன்றியது. உடனே அவன், "வாருங்கள், மகராஜ்! இந்தச் சந்தையிலே இந்த மாதிரிக் குதிரையை நீங்கள் பார்க்கவே முடியாது. அவ்வளவு நல்ல குதிரை இது!" என்று வரவேற்றான்.

அவர் குதிரையின் அருகில் சென்று முதுகைத் தடவி 'சொட்டு'க் கொடுத்தார். குதிரை வாலை விசிறிக்கொண்டு கம்பீரமாகக் கனைத்தது. "இதன் விலை என்ன, அப்பா?" என்று வீரமுத்துவைப் பார்த்துக் கேட்டார்.

"இதன் விலையா, எஜமான்? ஆயிரத்து எழுநூறு ரூபாயுங்க!" என்றான் வீரமுத்து.

"என்ன, அப்பா! ரொம்ப ஜாஸ்தியாகச் சொல்லுகிறாயே!"

"எனக்கு இதன் அடக்கமே ஆயிரத்து அறுநூறுங்க. ஒரு நூறு ரூபாயாவது லாபம் வேண்டாங்களா?" என்றான் வீரமுத்து.

"அது நியாயம்தான். விலை முன்னே பின்னே போனாலும்கூட எனக்கு ஒரு பிரமாதம் இல்லை. ஆனால் முதலில் ஒரு தடவை இதன் மேல் ஏறிச் சவாரி செய்து பார்க்க விரும்புகிறேன்" என்றார் கனவான்.

வீரமுத்துவுக்குச் 'சரி' என்று சம்மதிப்பதைத் தவிர வேறு வழி ஏது? குதிரைக்கு லகான் பூட்டிக் கனவான் முன்னே கொண்டு வந்து நிறுத்தினான்.

"அட! கையில் கிளி இருக்கிறதே, என்ன செய்வது? —சரி, இந்தா, நீ இந்தக் கிளியைச் சற்று வைத்துக் கொண்டிரு. நான் ஒரு தடவை சவாரி செய்து பார்த்து விட்டு வந்து வாங்கிக் கொள்ளுகிறேன்" என்று கூறிக் கனவான் தம் கையிலிருந்த கிளியை அவன் கையிலே கொடுத்தார். பிறகு குதிரையின் மேலேறி 'ஜம்'மென்று உட்கார்ந்து கொண்டு குதிரையைச் செலுத்தினார். குதிரை பெரு நடையாக நடந்தது. கொஞ்ச தூரம் சென்றதும் கனவான் என்ன நினைத்துக் கொண்டாரோ, தெரியவில்லை! குதிரையின் லகானைப் பிடித்து இழுத்தார். குதிரை தன் இரண்டு முன்னங் கால்களையும் அந்தரத்தில் தூக்கிக்கொண்டு ஒரு தடவை பம்பரமாகச் சுழன்றது. பிறகு கையில் கிளியுடன் இருந்த வீரமுத்துவின் அருகில் வந்தது. கன கம்பீரமாகக் குதிரையின் முதுகில் உட்கார்ந்திருந்த கனவான், "ஏன், அப்பா இந்தக் குதிரை எங்கே வாங்கியது?" என்று கேட்டார்.

"குன்னியூர்ச் சந்தையிலே வாங்கினதுங்க!" என்றான் வீரமுத்து.

"அப்படியா? உனக்கு வாங்கின விலைதான் தர முடியும். இஷ்டமிருந்தால் வாங்கிக் கொள். இல்லாவிட்டால் போ!" என்று அதிகாரம் தொனிக்கும் குரலில் கூறினார் கனவான். அடுத்த கணம் குதிரைமீது சுளீர் என்று சவுக்கடி விழுந்தது. உடனே அக்குதிரை வீரமுத்துவின் கண்ணிலே மண்ணைத் தூவி விட்டுக் காற்றாய்ப் பறந்து விட்டது.

வீரமுத்து கண்ணைக் கசக்கிக் கொண்டு குதிரை போன வழியே பார்த்துக் கொண்டிருந்தான். குதிரை கண்களுக்கெட்டிய தூரம்வரை புழுதியை வாரி விசிக் கொண்டு ஓடி மறைந்த பின்னர்தான் வீரமுத்துவுக்கு விஷயம் விளங்கியது. குன்னியூர்ச் சந்தையிலே குதிரைக்குச் சொந்தக்காரனாக இருந்தவன்தான் இங்கு வந்து குதிரையை அடித்துக் கொண்டு போய் விட்டான் என்பதை அடுத்த நிமிஷமே ஊகித்துக் கொண்டான்.



வீரமுத்து தன்னை மறந்து, "திருட்டுப் பயல்!" என்று சற்று உரக்கவே முணுமுணுத்துக் கொண்டான். அதே

## கோபுவின் பதில்

அந்த வித்தையைப் பற்றி யோசித்து யோசித்துச் சீனுவுக்கு மூளைதான் குழம்பிற்றே ஒழிய வித்தை புரிந்தபாடில்லை. கடைசியில் கோபுவின் வீட்டுக்குப் போய், "கோபு எனக்கு அந்த வித்தையைச் சொல்லித் தரமாட்டாயா!" என்று கெஞ்ச ஆரம்பித்து விட்டான்.

"இது ஒன்றும் அப்படிப் பிரமாதமான வித்தையில்லையே! நான் உனக்கு எத்தனை தம்பிகள் என்று கேட்டதும் நீ மனத்தில் 'நான்கு' என்று தானே நினைத்துக் கொண்டாய்!" என்று கேட்டான் கோபு.

"ஆமாம்."

"அப்புறம் அதை இரண்டு மடங்காக்கிக் கொண்டாய், அல்லவா!"

"ஆமாம். விடை எட்டு வந்தது."

"எட்டை ஐந்தால் பெருக்கியதும் வந்த விடை என்ன!"

"நாற்பது."

"அத்துடன் உன் தங்கைகள் மூன்று பேரையும் கூட்டிக் கொண்டாய், இல்லையா!"

"ஆமாம்."

"அதில் முதல் எண்ணாக நீ நினைத்துக் கொண்ட நான்கே வந்துவிட்டது. அதுதான் உன் தம்பிகள். இரண்டாவது எண் தங்கைகள்"

"அப்படியா! எந்தக் கணக்குப் போட்டாலும் இப்படியே தானா!"

"ஆமாம். வேண்டுமானால் போட்டுப் பாரேன்!"

சிறிது நேரம் சீனு மனத்துக்குள் முணுமுணுத்துக் கொண்டான். பிறகு, "அட, இது நல்ல வித்தையாக இருக்கிறதே!" என்று சொல்லிக் கொண்டே தன் மற்ற நண்பர்களிடம் தான் கற்ற புது வித்தையைக் காட்ட ஓட்டம் பிடித்தான்.

சமயம் அவன் கையிலிருந்த கிளி "யாரடா அவன் கெட்ட பயல்?" என்றது. கிளி தன்னைத்தான் சுட்டிக் காட்டுகிறதோ என்று எண்ணி வீரமுத்து வெட்கித் தலை குனிந்தான்.

பிறகு அவன் அங்கிருந்து அந்தக் கிளியுடன் தன் ஊரை நோக்கி நடையைக் கட்டினான். இரண்டு நாட்கள் நடந்த பின்தான் அவன் தன்னுடைய வீட்டை அடைய முடிந்தது.

அவனுடைய பாட்டி, 'அவன் ஏராளமாகப் பணம் கொண்டு வரப் போகிறான். கஷ்டம் விடிந்து விடும்' என்று கனவு கண்டு கொண்டிருந்தாள். வீரமுத்து முகத்தைத் தொங்க விட்டுக்கொண்டு வருத்தமே உருவாக வந்து நிற்பதைக் கண்டதும் அவளுக்கு ஒன்றும் புரியவில்லை. "என் வீரமுத்து! குதிரையை என்ன விலைக்கு விற்றாய்?" என்று கேட்டாள்.

"வாங்கின விலைக்குத் தான் விற்க முடிந்தது. கிடைத்த லாபம் இந்தக் கிளி மட்டுந்தான்" என்று பதில் அளித்தான் வீரமுத்து.

"வாங்கின விலைக்கு விற்றாயா? நீ அந்தக் குதிரை பகல் வேஷத்துக்குப் பரிசாகக் கிடைத்தது என்றல்லவா அன்றைக்குச் சொன்னாய்?"

வீரமுத்து, தான் குன்னியூர்ச் சந்தைக்குப் போனது, குதிரையைத் திருடி வந்தது முதலிய விஷயங்களை யெல்லாம் ஒன்றுகூட விடாமல் சொன்ன பிறகுதான் பாட்டிக்கு விஷயம் புரிந்தது.

பாட்டிக்குத் தன் பேரன் திருட்டுத் தொழிலில் ஈடுபட்டிருக்கிறான் என்று இன்று வரை தெரியாது. 'அவன் சுத்தச் சோம்பேறி. சற்றுக் கடிந்துகொண்டால் நிறையச் சம்பாதித்துவிடுவான்' என்று தான் எண்ணி வந்தாள். பல நாள் திருட்டின் குட்டு இன்று வெளியானதும் அவள் அவனைப் பலவாறு கடிந்துகொண்டாள். "சுத்தம்தான் சோறு போடும். பலநாள் திருடன் என்றைக்காவது ஒரு நாள் பிடிபட்டே தீருவான். ஆகவே திருட்டுத் தொழிலே கூடாது" என்று அவனுக்குப் புத்திமதி புகட்டினாள்.

அவனுக்குக் கிடைத்திருந்த கிளி அவன் மனம் தீய வழியில் செல்ல முற்படும்பொழுதெல்லாம், 'யாரடா அவன் கெட்ட பயல்?' என்று கேள்வி கேட்டு அவனை எச்சரித்து வந்தது. கடவுள்தான் கிளி உரு எடுத்துத் தீய வழியில் செல்லாதே என்று தன்னைத் தடுக்கிறாரோ என்று எண்ணி வீரமுத்து தீய தொழிலான திருட்டையே ஒழித்துவிட்டான். அதுமுதல் நல்லவனாகவும் நடந்து கொண்டான். அப்புறம் அவன் வாழ்க்கையில் சாப்பாட்டுக்கே கவலை இல்லை என்றால் பார்த்துக் கொள்ளுங்களேன்! 'சுத்தம் சோறு போடும்' என்ற பாட்டியின் உபதேசம் உண்மையானது என்றே தோன்றுகிறதல்லவா?

(முற்றும்)




இந்த வருஷம் கோடை எவ்வளவு சீக்கிரம் வந்து விட்டது பார்த்தீர்கள் அல்லவா? 'உஸ், உஸ்' என்ற சத்தமும், 'வெய்யில் தாங்க முடியவில்லையே!' என்ற பிரலாபமும், 'சித்திரை வைகாசியெல்லாம் எப்படிக் கழியப் போகிறதோ!' என்ற அங்கலாய்ப்பும் நாட்டில் எங்கும் கேட்கத் தொடங்கி விட்டது.

இந்த நிலைமையில் மாருதி பாங்க் மானேஜர் மாதவராவால் சும்மா இருக்க முடியுமா? உடனே உதகமண்டலத்துக்குப் போவது என்று திட்டமிட்டார்.

மனைவிக்கு, மறுநாளே உதகமண்டலத்துக்குப் போகத் தயாராகும்படி கட்டளையிட்டார். உதகமண்டலத்தில் தம் நண்பருக்கு, உடனே தம் தேவைக்கு ஒரு பங்களா பார்த்து வைக்கும்படி செய்தியனுப்பினார். காரியாலயத்துக்கு வந்தார். தமது காரியதரிசி வ்யாக்ரபாத மய்யரைக் கூப்பிட்டு, "ஓய், நான் நாளை இராத்திரி மெயிலில் உதகமண்டலத்துக்குப் போகிறேன். ஆபீஸ் தபால்களையெல்லாம் நீரே பிரித்துப் பார்த்து, வாரம் இரு முறை எனக்கு அனுப்பி வையும்" என்று கூறினார்.

"அப்படியே செய்கிறேன்" என்றார் வ்யாக்ரபாதமய்யர்.

* * *

மானேஜர் மாதவராவ் உதகமண்டலத்துக்கு வந்து நான்கு நாட்கள் ஆயின; ஆறு நாட்களாயின; ஏழு நாட்களும் ஆயின. ஆயினும் அவருக்குத் தபால்கள் வரவில்லை. "என்ன செய்கிறான் இந்த முட்டாள் வ்யாக்ரபாதன்! வருகிற கடுதாசிகளையெல்லாம் கிழித்துக் குப்பைக் கூடையில் போடுகிறானா, என்ன? ஏன் இன்று வரை ஒரு தபாலும் வரவில்லை?" என்று ஏங்கினார்.

எட்டு நாள் ஆகியும் தபால் வராததைக் கண்ட மாதவராவ், உதகமண்டலத்திலிருந்து சென்னையிலிருக்கும் வ்யாக்ரபாதமையருக்கு 'டிரங்க் டெலிபோ'னில் பேசினார், "என் ஐயா, இங்கு வந்து எட்டு நாள் ஆகிறது. ஆபீஸிலிருந்து ஒரு தபாலும் இதுவரை எனக்கு அனுப்பவில்லை?" என்று கடுமையான குரலில் கேட்டார்.

"நம் ஆபீஸ் வாயிலில் வைக்கப்பட்டிருக்கும் தபால் பெட்டியில் தினம் வரும் தபால்களைத் தபால்காரர் போட்டுவிட்டுப் போகிறார். ஆனால் தபால் பெட்டியின் சாவி தங்களிடம் இருப்பதால், தபால் பெட்டியைத் திறக்க முடியவில்லை. ஆகவே, தபால்களைப் பரிசீலனை செய்ய முடியவில்லை. எட்டு நாள் தபால்களும் அந்தப் பெட்டியில் தான் தூங்குகின்றன" என்றார்.

"அழகுதான் போ! உடனே தெரிவிப்பதற்கென்ன? இந்த எட்டு நாளும் தூங்கிக் கொண்டா யிருந்தீர்? சரி, போனது போகட்டும். நாளைத் தபாலில் சாவியை அனுப்புகிறேன், தபால் பெட்டியைத் திறந்து, தபால்களை அனுப்பும்" என்றார்.

* * *

தபால் பெட்டியின் சாவியை அனுப்பி ஐந்து நாட்களாயின. இன்னும் சரியாகத் தபால்கள் வரவில்லை. மாதவராவால் பொறுக்க முடியவில்லை. "சே, சே! என்ன ஆபீஸ்! ஒரு பத்து நாள் ஆபீஸில் இல்லையென்றால், அதற்குள் இந்த ஆபீஸ் இவ்வளவு ஊழலாகப் போய்விடுகிறதே! தபால் அனுப்பக்கூட வக்கில்லை. சாவியை அனுப்பி ஐந்து நாள் ஆகிறது, ஒரு தகவலும் இல்லையே!" என்று முணுமுணுத்துக் கொண்டார்.

கடைசியில் மறுபடியும் டெலிபோனுக்குப் போய் சென்னையில் தமது காரியாலத்துக்கு டெலிபோன் பண்ணினார். வ்யாக்ரபாத மய்யர்தான் எடுத்தார் சென்னையில் டெலிபோனை இந்தத் தடவையும்!

"என்ன ஐயா, இது! சாவி அனுப்பி ஏழுநாள் ஆகிறது, இன்னும் தபால் அனுப்பாமல் இருக்கிறீர்? நேரில் வந்தேனானால் தொலைத்து விடுவேன், ஜாக்கிரதை!" என்று எரிந்து விழுந்தார்.

"நான் என்ன ஸார் பண்ணட்டும்? நீங்கள் அனுப்பிய சாவிப் பார்சலும், அந்தத் தபால் பெட்டிக்குள்தான் விழுந்திருக்கிறது. பின் நான் எப்படி ஸார், தபால் பெட்டியைத் திறப்பேன்?" என்று பரிதாபமாகச் சொன்னார் வ்யாக்ரபாதமய்யர்.




ஆசிரியர்: கே. எம். முன்ஷி; மொழிபெயர்ப்பு: ரா. வி.

## 5. மூளை குழம்பியது!

தினேஷுக்குத் தன் மூளையே குழம்பி விடும் போலிருந்தது. தன் வாழ்க்கையை நினைக்க நினைக்க அவனுக்குத்தான் பைத்தியம் பிடித்துப் பாயைச் சுரண்ட ஆரம்பித்து விடுவோமோ என்றே எண்ணத் தோன்றியது. அவன் மனம் மறுபடியும் சிந்தனையில் லயித்தது.

ஆத்ம பலமாம், ஆத்ம பலம்! என்ன ஆத்ம பலம் வேண்டிக் கிடக்கிறது? எவ்வளவு கீழே போக முடியுமோ, அவ்வளவு கீழே போன பின் ஆத்ம பலம் எங்கிருந்து வரும்? மட்ட ரகமான ரத்தம் ஓடும் இடத்திலே ஆத்ம பலம் வந்து முளைத்து விடுமோ?

எப்படியாவது சிறை புகுந்துவிட வேண்டும். முடியாவிட்டால் தற்கொலையாவது செய்து கொண்டு விடவேண்டும் என்று மனத்துள் தீர்மானமாக அவன் முடிவு கட்டிக்கொண்டு விட்டான். அவன் சிறைச் சாலைக்கு ஏன் செல்லக் கூடாது? தான் பண்ணின பாபத்துக்குப் பிராயச்சித்தம் ஏன் செய்துகொள்ளக் கூடாது? அவன் எவ்வளவுதான் தாழ்ந்தவனாயிருந்தால் என்ன? தன் தியாகத்தின் மூலமாகத் தாய் நாட்டின் நலனுக்குப் பாடுபடக் கூடாது என்று எந்த சாஸ்திரத்தில் எழுதி வைத்திருக்கிறது? தாய் நாட்டின் நலனுக்குத் தன்னுயிரைத் தியாகம் செய்யவில்லையென்றால், மனிதப் பிறவி எடுத்துத்தான் என்ன பயன்? தாய் நாட்டுக்காகத் தியாகம் செய்யத் துணியாத ஜன்மம் ஒரு ஜன்மமா?

இந்தச் சிந்தனையில் அவனுக்குச் சற்று நிம்மதி ஏற்பட்டது. தன் தாய் செய்த தீச்செயலுக்குப் பிராயச்சித்தம் செய்தே தீருவது என்று அவன் மனத்தில் சங்கற்பம் செய்து கொண்டான். இன்ஸ்பெக்டரின் கைவிரலிலே அவன் கண்ட காயத்தின் வடுத்தான் இதற்குத் தூண்டுகோலாக இருந்தது. அன்று வெளியில் புறப்பட்டவன் அப்படியே ஆசிரமத்துக்குப் போய் விட்டான். பிறகு, தான் ஆசிரமத்துக்குப் போய்விட்டதாக வீட்டுக்குச் செய்தி மட்டும் சொல்லி அனுப்பினான்.

மறுநாள் முதல் தினேஷ் சத்தியாக்கிரகப் போரிலே நெருப்பாகவே உருமாறி விட்டான். அவன் உள்ளத்திலே சத்தியாக்கிரகத்தின் ஆவேசம் தாண்டவமாடியது; தீ கொழுந்து விட்டெரிந்தது. பட்டினி, பசி, தாகம், தூக்கம் எல்லாவற்றையும் அறவே விட்டொழித்தான். தன் ஆத்ம பலத்தின் பலத்தைக் கொண்டு பிரிட்டிஷ் ஆட்சியையே தலைகீழாகக் கவிழ்த்து விடுவதாக அவன் சபதம் பூண்டான். இன்ஸ்பெக்டரின்

காயம் பட்ட கைவிரல் அவன் கண்கள் எதிரே நின்று காட்சி அளித்து அவனுடைய தீர்மானத்தை மேலும் மேலும் உறுதிப் படுத்திக் கொண்டேயிருந்தது. ஆமதாபாத்திலே வீசிக்கொண்டிருந்த புயலில், பஞ்சாப் படுகொலை நிமித்தமாகக் கொழுந்து விட்டெரிந்து கொண்டிருந்த ஜ்வாலையில், பர்தோலி சத்தியாக்கிரஹப் போரில், எங்கெங்கே பார்த்தாலும் அங்கங்கே நிரேஷ் டாகுரின் பெயர்தான் ஒலித்துக் கொண்டிருந்தது. இந்தியா முழுவதும் அவன் புகழ் பரவியது. அவன் புகழ் ஓங்க ஓங்க அவனுக்குத் தன் தாழ்மை மேலோங்கிக் கொண்டே போவதாகத் தோன்றியது. அதற்காகவெல்லாம் அவன் மனம் உடைந்து போய் உட்கார்ந்துவிடவில்லை. அவற்றையெல்லாம் சிறிதும் பொருட்படுத்தாமல் அவன் தன்னைத்தானே அர்ப்பணம் செய்து ஆஹுதி கொடுத்து விடுவது என்ற எண்ணத்துடன் சத்தியாக்கிரகப் போரில் மும்முரமாக ஈடுபட்டான்.

இந்தப் பிராயச்சித்த வேள்வியிலே ஈடுபட்டு அவன் தன் குடும்பத்தையே மறந்து விட்டான். அவன் வரும்படியும் கொஞ்சங் கொஞ்சமாகக் குறைந்து கடைசியில் அடியோடு நின்றே போய்விட்டது. அதன் காரணமாக அவன் குடும்பம் பல கஷ்டங்களுக்கும் இன்னல்களுக்கும் இலக்காகியது.

ஆனால் அவன் ஆசிரமத்துக்குப் போன இரண்டு மூன்று நாட்களுக்கெல்லாம் இன்ஸ்பெக்டர் அவனுடைய வீட்டுக்குப் போக ஆரம்பித்தார். இரண்டு மூன்று மணி நேரம் அங்கேயே உட்கார்ந்து குழந்தையுடன் விளையாடிப் பொழுதைப் போக்கவும் தொடங்கினார். இந்தக் காரியம் அவருக்கு எவ்வளவோ மன நிம்மதி யளித்தது. அவருடைய வறண்ட பாலைவனத்துக்கு ஒப்பான வாழ்க்கை துளிர் விட்டுத் தளிர்த்துப் பசுமையாகக் காட்சி அளிக்கத் தொடங்கியது. கடைசியில் அவர் அந்தக் குடும்பத்துக்கு வேண்டியவர் என்ற முறையில், அந்தக் குடும்பத்தின் பொருளாதாரச் சிரமங்களைப் போக்குவதற்கான உரிமையைக் கமலாம்பாளிடம் பெற்றுக் கொண்டார். கமலாம்பாள் தமக்கு அளித்த அந்த உரிமைக்குச் சிறிதும் பங்கம் விளையாமல் அவர் கடைசி வரை நிர்வகித்தும் வந்தார்.

இந்த விஷயம் நிரேஷின் காதுகளுக்கு எட்டியது. அவன் இன்னும் அதிகமாக மனம் புழுங்கலானான். ஆகவே அவனுடைய ஆத்மா அநேக விதமான சித்திரவதைக்கு உள்ளாகியது. அதன் காரணமாக அவன் தன்னுடைய பிராயச்சித்தத்தை இன்னும் அதிகமாக்கிக் கடுமையாக்கிக் கொள்ளுவதென்று விரதம் பூண்டான். அவனுடைய இந்தப் பீஷ்மப் பிரதிக்ஞைக்கு மூலகாரணமாயிருந்து விளங்கியது இன்ஸ்பெக்டரின் காயம் பட்ட அதே கை விரல்தான்.

அவன் பூண்ட பீஷ்மப் பிரதிக்ஞைதான் இன்ஸ்பெக்டரின் துண்டிக்கப்பட்ட விரலின் உருவத்திலே உருவம் பெற்றிருந்ததோ என்று நினைக்கத் தோன்றியது. அவருடைய அந்தக் கை விரல்தான் நிரேஷைத் தியாகிகளில் சிறந்த தியாகி ஆக்கியது என்று சொன்னால் அது சிறிதும் மிகையாகாது.

* * *

காந்திஜி பர்தோலி சத்தியாக்கிரஹம் சம்பந்தமாக அறிக்கைகள் வெளியிட்டு விட்டார். அவர் தேசத் தலைவர் என்ற ஹோதாவில் தைரியமாகத் தலை நிமிர்ந்து நின்று பிரிட்டிஷ் ஆளும் வர்க்கத்தினருக்குச் சவாலும் விடுத்தார். அவரையே பின்பற்றுவதென்று விரதம் பூண்டவர்கள் அத்தனைபேரும் அவர் விடுத்த அறிக்கையைச்



# மிஷின்கள் ஒழிந்தால்!......













செயலில் காட்டுவதற்கு வரிந்து கட்டிக்கொண்டு தயாராகி விட்டனர். அந்தச் சூழ் நிலைக்கே ஒரு உற்சாகம் உண்டாகி விட்டது. சத்தியாக்கிரஹப் போர் வீரர்களும் சர்க்காரும் தங்கள் தங்கள் பலத்தைப் பெருக்குவதற்காகப் பலவாறு முயன்று கொண்டிருந்தனர். இரண்டு நாட்களாக இன்ஸ்பெக்டர் பிரமோதராய் — இல்லை, இல்லை; டி. எஸ். பி. 'ஸ்பெஷல் டியூட்டி'யில் பர்தோலிக்கு வந்திருக்கிறார் என்னும் செய்தி நீனேஷின் காதுகளுக்கும் எட்டியது.

அன்று 1922-ம் வருஷம் பிப்ரவரி மாதம் பதினோராம் தேதி. நீனேஷ் ஆசிரமத்துக்குள்ளிருந்து வெளியே வந்தான். அவன் உடல் ஒட்டி ஒடாகிக் கிடந்தது. அவன் கண்களிலும் இயற்கைக்குப் புறம்பான ஒரு காந்தி உண்டாகியிருந்தது. இன்னும் கொஞ்ச நாட்களில் ஒன்று அவன் சிறைக்குச் சென்றுவிட வேண்டும். இல்லாவிட்டால் யாராவது ஒரு போலீஸ்காரனின் கைத் துப்பாக்கிக்கு இரையாகி வீர சொர்க்கம் எய்த வேண்டும். இந்த இரண்டை விட்டால் அவனுக்கு வேறு வழி இல்லை. அவனுடைய வாழ்க்கையென்னும் மாபெரும் வேள்வியிலே பூர்ண ஆஹுதி கொடுக்க வேண்டிய தருணம் நெருங்கி வந்துகொண்டிருந்தது.

யாரோ மறைவில் நின்று கொண்டிருந்தார்கள். நீனேஷ் தலை நிமிர்ந்து அந்தப் பக்கம் தன் பார்வையைச் செலுத்தினான். இன்ஸ்பெக்டர் ஆஜானுபாஹுவாக முதிர்ந்த பிராயத்துடன் கௌரவமே உருவெடுத்து வந்தவர் போல நின்று கொண்டிருந்தார். அவருடைய முகத் தோற்றத்திலே வாத்ஸல்ய பாவம் தோய்ந்திருப்பது நன்றாகத் தெரிந்தது. ஆனால் கரு நாகத்தைக் கண்டவன் கதிகலங்கிப் போவது போலத் நீனேஷ் அவரைக் கண்டு நடுக்கமுற்றான்.

நாம் எங்கே போனாலும் இந்த இன்ஸ்பெக்டர் இப்படிப் பின் தொடருகிறாரே, ஏன்? என்று தினேஷ் சிந்தனையிலே ஆழ்ந்து விட்டான்.

"என்ன தினேஷ்! எப்படி இருக்கிறாய்?" என்று விசாரித்துக் கொண்டே இன்ஸ்பெக்டர் அவனை நெருங்கினார்.

"அட, நீங்களா? இந்தப் பக்கம் எங்கே வந்தீர்கள்?" என்று கேட்டான் தினேஷ்.

சாந்திஜியுடன் இருந்து இருந்து பழகிய தனால் பிறரை அவமதிக்கும் சக்தி அவனிடமிருந்து வர வரக் குறைந்து வந்தது.

"உன்னைக் காப்பாற்றுவதற்காகத்தான்!"

"என்னைக் காப்பாற்றுவதற்கா? எதற்காக என்னைக் காப்பாற்ற வேண்டும்? என்னைக் காப்பாற்ற வேண்டிய அவசியம் அப்படி என்ன உங்களுக்கு வந்து விட்டது?" என்று கேட்டான் தினேஷ்.

"உன்னை உன் அம்மா, மனைவி, குழந்தை இவர்களிடம் கொண்டு போய் ஒப்படைத்தாக வேண்டும். அதற்காகத்தான் ..."

"ஒப்படைத்தாகத்தான் வேணுமோ?" என்று தினேஷ் திரஸ்காரம் நிறைந்த குரலில் கேட்டான். பிறகு, "நானே தான் நாளைக் காலையிலேயே அங்கே போய் விடப் போகிறேனே! அப்படியிருக்கும் பொழுது நாங்கள் இந்தச் சிரமத்தை எடுத்துக் கொள்ள வேண்டியதன் அவசியம் என்னவோ?" என்று கேட்டான்.

"அவசியம் இல்லாவிட்டால் நான் உன்னை இப்படிச் சுற்றுவேனா? ஆமாம், நீ ஆமதா பாத்துக்குத்தானே போகப் போகிறாய்?" என்று கேட்டார் இன்ஸ்பெக்டர். அப்பொழுது அவருடைய முகத்திலே இலேசாகக் குறுநகை தாண்டவமாடியது.

"உங்களுக்கு இதெல்லாம் எதற்கு?" என்று தினேஷ் மிகவும் கசப்பாகக் கேட்டான். அவரைக் கண்ட மாத்திரத்திலேயே அவனுக்கு என்னவோ அப்படி ஆத்திரம் ஆத்திரமாக வந்தது.

"சர்க்கார் உத்தியோகஸ்தர்களுக்குச் சொந்த காடு, சத்தியாக்கிரஹம், சுதந்திரம் இவையெல்லாம் என்ன வேண்டிக் கிடக்கிறது?" என்று அலுத்துக் கொண்டே தினேஷ் பின்புறம் திரும்பினான்.

இன்ஸ்பெக்டர் சத்தம் போட்டுச் சிரித்தது அவன் காதுகளில் ஒலித்தது. அவன் அதைக் காதில் வாங்கிக் கொள்ளாதவன் போல நேரே சாந்தி ஆசிரமத்தில் உள்ள கூடாரத்துக்குள் நுழைந்தான். (தொடரும்)

# கம்பர் தரும் காட்சி

டி. கே. சி

## 320. உன் வயிற்றில்ப் பிறந்து விட்டோம்!

இந்திரஜித்து உபயோகித்த பிரம்மாஸ்திரத்தால் வானர சேனைகளும், லக்ஷ்மணன், ராமன் எல்லாரும் உயிர் இழந்த நிலைக்கு வந்தார்கள் என்பதைப் பார்த்தோம்.

அனுமன் கொண்டு வந்த மூலிகையால் அவர்கள் உயிர் பெற்றார்கள் என்பதையும் பார்த்தோம்.

அனுமன் மேலுள்ள பேருணர்ச்சி காரணமாக அவனை மார்போடு அணைத்துத் தழுவிக் கொண்டான் ராமன் என்பதையும் பார்த்தோம்.

*  *  *

அப்படித் தழுவிக் கொண்ட ராமனுடைய மார்பு சாமான்ய மார்பா!

திருப்பாற்கடலில் ஆதிசேஷ சயனத்தில் ஆனந்தமயமாய் இருக்கும்போது விஷ்ணு மூர்த்தியின் மார்பை லக்ஷ்மி தேவி ஆசையோடு தழுவிக் கொண்டாள்.

அந்த விஷ்ணு மூர்த்தியின் மார்பு தானே இந்த ராமனது மார்பு. ஜகன் மாதாவின் ஸ்தன்யங்கள் தழுவிய மார்புதானே அது. அந்த மார்பை ஒட்டலாமா எளியேன் என்று அனுமன் எண்ணி, அப்படியே நழுவி ராமனுடைய பாதங்களுக்கு வந்து விட்டான். பாதங்களைக் கையால் பற்றித் தொழுது கிடக்கிறான் கீழே.

சிறிது நேரங் கழித்துத்தான், அனுமன் மார்பிலிருந்து நழுவிப் பாதத்தைத் தொழுது கிடக்கிறான் என்பது தெரிய வந்தது ராமனுக்கு.

எழுது குங்குமத்
  திருவின் ஏந்துகோடு
உழுத மார்பினன்
  உருகி, உள்ளுறத்

தழுவி நிற்றலும்,—
  தாழ்ந்து தாளுறத்
தொழுத மாருதிக்(கு)
  இனிய சொல்லினன்.

[எழுது குங்குமத் திருவின் ஏந்து கோடு: வர்ணக் கோலங்கள் எழுதி அலங்கரித்த லக்ஷ்மி தேவியின் ஸ்தன்யங்கள்; உழுத மார்பினன்: ஆசையோடு நினைந்த மார்பினனுமெய ராமன் (விஷ்ணு); உருகி உள்ளுறத் தழுவி நிற்றலும்: மனம் கசிந்து மார்போடு இறுகத் தழுவி நின்றான். அப்படியே நின்று கொண்டிருந்தான் சிறிது நேரம் பரவச நிலையில்;

தாழ்ந்து தாள் உறத் தொழுத மாருதிக்கு: அடடா இந்த மார்போடு ஒட்டலாமா நான் என்று எண்ணிக் கீழே தழுவிப் பாதங்களைப் பற்றித் தொழுது கிடந்த அனுமனுக்கு; இனிய சொல்லினன்: கீழே வரும் வார்த்தைகளைச் சொன்னான்—ஏந்து கோடு உழுத மார்பினன்.]

குறிப்பு:—ராமனிடத்தில் அளவற்ற பக்தி உடையவன் அனுமன். ராமனுடைய பேரன்புக்கும் மார்போடு தழுவும் பரிவுக்கும் தகுதி அற்றவன் என்று தன்னை எண்ணிக் கொள்ளுகிறான். இந்த எண்ணம் வந்த உடனே மார்பை விட்டு மெள்ள நழுவிப் பாதங்களுக்கு வந்து விடுகிறான். அப்படி தழுவி வரும் செயல், செய்யுளின் ஓசையிலேயே தொனிக்கிறது. எழுது — உழுத — தழுவி — தொழுத—என்ற எதுகையில் வரும் சொற்கள் தழுவி இறங்கியதை நினைப்பூட்டுகின்றன.

ராமன் என்ன சொன்னான் அனுமனை நோக்கி:

"எங்கள் மூதாதைகள் எல்லாரும் மகான்கள். எந்தக் காரணத்தை முன்னிட்டும் சத்தியத்தினின்றும் தர்மத்தினின்றும் விலகாதவர்கள்.

"அந்த மூதாதைகளையே பின்பற்றி அரசு செலுத்தி வந்தான் எங்கள் தந்தை தசரதன்.

"அந்தச் சத்தியத்தின் காரணமாகவே என்னைக் காட்டுக்கு அனுப்ப நேர்ந்தது. ஆகவே என்னாலேயே பெருந் துயரத்துக்கு உள்ளாகி உயிர் துறந்தான். அப்படி உயிர் துறந்த தசரதன் வயிற்றில்த்தான் பிறந்தோம் நானும் தம்பி லக்ஷ்மணனும்."

முன்னில்த் தோன்றினர்
 முறையின் நீங்கலா(து)
என்னில்த் தோன்றிய
 துயரின் ஏறுசேர்,
மன்னில்த் தோன்றினேம்
 முன்னம் மாண்டுளேம்;—
நின்னில்த் தோன்றினேம்
 நெறியில்த் தோன்றினாய்!

[முன்னில்த் தோன்றினர்: ஆதியிலே எங்கள் குலத்தில் அவதரித்த பேரரசர்களுடைய; முறையின் நீங்கலாது: சத்திய நெறியை விட்டு நீங்க முடியாதவனாய்; என்னில்த் தோன்றிய துயரின்: என் காரணமாகவே (காட்டுக்கு வந்த காரணமாகவே) ஏற்பட்ட துயரத்தால்; ஏறு சேர் மன்னில்த் தோன்றினேம்: உயிர் துறந்த தசரத சக்கரவர்த்தியின் மக்களாய்த்தான் பிறந்தோம்; ஆனால்—முன்னம் மாண்டுளேம்: கொஞ்ச நேரத்திற்கு முன்பு தான் உயிர் போனவர்கள் ஆனோம்; ஆம், உயிர் போனவர்கள் தான்; நின்னில்த் தோன்றினேம்: இப்போது உன் வயிற்றில் உன்னுடைய மக்களாய்ப் பிறந்து விட்டோம்;

நெறியில்த் தோன்றினாய்: சாமான்யமாய் ஒரு பெண் வயிற்றில் பத்து மாசம் இருந்து பிறந்தவன் அல்ல நீ. தர்ம தேவதையின் வயிற்றில் நெடுங்காலம் இருந்து பிறந்தவன் அல்லவா நீ-ஆம், நின்னில்த் தோன்றினேம்.]

நன்றி உணர்ச்சி என்பது ஒன்று. அது இதயத்தில் நிகழ்வது; கண்ணுக்குப் புலனாகாதது. ஆனாலும் அந்த உணர்ச்சி ஒரு செய்யுளாய்க் கண்ணுக்குப் புலனாகிறது; செவிக்கும் புலனாகிறது. தமிழ் பாஷை செய்கிற அற்புதம் இது.

# அதுவா காரணம்!

ஒருநாள் ராமுவும், அவனுடைய அம்மாவும் சாமான்கள் வாங்கி வருவதற்காகக் கடைத்தெருவுக்குப் புறப்பட்டார்கள். கடைத் தெருவில் அவர்களுக்கு வழக்கமான கடையில் சாமான்கள் வாங்கினார்கள்.

சாமான் வாங்கிக் கொண்டு வீட்டுக்குப் புறப்படும்போது கடைக்காரன் ராமுவின்மீது பிரியப்பட்டு, "அம்பி! இந்தத் தட்டிலிருந்து கொஞ்சம் பட்டாணிக் கடலை எடுத்துக் கொள்" என்று கூறினான். ஆனால் ராமு உடனே தானாகப் பட்டாணிக் கடலையை எடுத்துக் கொள்ள முன் வரவில்லை. சிறிது பின் தங்கியே நின்றான்.

அதைப் பார்த்ததும் அந்தக் கடைக்காரன் ஆச்சரியத்துடன், "என்ன அம்பி! உனக்குப் பட்டாணிக் கடலை பிடிக்காதா?" என்று கேட்டான்.

"ரொம்பப் பிடிக்கும்" என்று கூறித் தயங்கியபடியே நின்றான் ராமு. உடனே கடைக்காரன் அவனது சங்கோசத்தைக் கண்டு அவனே அந்தப் பட்டாணித் தட்டிலிருந்து தன் கையளவு பட்டாணிக் கடலையை எடுத்து, "இந்தா, அம்பி! வாங்கிக் கொள்!" என்று கூறிக் கொடுத்தான். ராமுவும் தன் கையிலிருந்த பையில் போடச்சொல்லி வாங்கிக் கொண்டான். பிறகு அவன் அம்மாவும், அவனும் அந்தக் கடையிலிருந்து புறப்பட்டார்கள்.

சிறிது தூரம் சென்றதும் அவன் அம்மா, "என்ன ராமு! அவன் முதலில் பட்டாணிக் கடலை எடுத்துக் கொள்ளச் சொன்னபோது நீ ஏன் எடுத்துக் கொள்ளவில்லை?" என்று ஆச்சரியத்துடன் கேட்டாள்.



"அதுவா, அம்மா! நானாக எடுத்துக் கொண்டால் என் சின்னக் கையால் கொஞ்சந்தானே எடுத்துக் கொள்ள முடியும்? அவன் கையால் கொடுத்தால் நிறைய இருக்குமல்லவா?" என்றான் ராமு. அவன் சொன்ன பதிலைக் கேட்டுத் திகைத்துப் போனாள் அம்மா. —பி. எஸ். மணி.




பகீரதன்

"முனியம்மா! குழந்தையைப் பார்த்துக்கோ. நான் எஜமானியம்மா வீட்டுக்குப் போய் ஏதாவது கஞ்சிக்கு ஏற்பாடு பண்ணி விட்டு வருகிறேன்" என்று சொல்லி 'விர்' என்று வெளியில் சென்றாள் செல்லாயி.

குழந்தையை எடுத்து மடியில் வைத்துக் கொண்டு கொஞ்சிக் கொஞ்சி வேடிக்கை காண்பித்தாள் செல்லாயியின் மூத்த மகள் முனியம்மாள்.

இந்த உலகத்தின் கபடவஞ்சக கோரமும் உணவுப் பஞ்சத்தின் கொடுமையும் வேறு பல தொல்லைகள் ஒன்றையுமே அறியாத குழந்தை தன் சின்னஞ் சிறு வாயைத் திறந்து சிரிக்க ஆரம்பித்தான். அந்தக் கபடமற்ற சிரிப்பைப் பார்த்தவுடன் முனியம்மாளுக்குச் சந்தோஷம் தாங்கவில்லை. தன்னை மறந்து குழந்தையுடன் சேர்ந்து குதூகலமாகச் சிரித்தாள்.

அந்தச் சமயத்தில் வெளியில் விளையாடிக் கொண்டிருந்த முனியம்மாவின் மூன்று வயதுத் தங்கை ராஜாத்தி அங்கு வந்து, "அக்கா! எனக்கு ரொம்பப் பசிக்குது! கொஞ்சம் சோறுபோடேன்!" என்று கெஞ்சும் குரலில் அழுதுகொண்டே கேட்டாள்.

பாவம் அறியாச் சிறுமி முனியம்மாள் என்ன செய்வாள்! "அம்மா வெளியிலே போயிருக்கு, வந்தவுடனே உனக்குச் சோறு போடும்" என்று சமாதானம் செய்தாள். ராஜாத்தியோ அழுகையை நிறுத்தியபாடாயில்லை. மேலும் மேலும் 'பசி பசி' என்று அழுதாள்.

பத்து வயதுகூட நிரம்பாத முனியம்மாள் தன் தங்கையின் பரிதாப அழுகையைப் பார்க்க முடியாமல் வேதனைப் பட்டாள். "ராஜாத்தி! கம்மா அழாதே. அம்மா வந்தவுடன் உனக்குச் சோறு போடும்" என்று சொல்லி ராஜாத்தியின் அழுகையை நிறுத்த முயன்று கொண்டிருந்தாள் முனியம்மாள்.

இந்தமாதிரி வேதனைகள் ஒன்றும் தெரியாத குழந்தை பாயில் படுத்துக் கொண்டு ஏதோ புரியாமல் சத்தமிட்டுச் சிரித்து விளையாடிக் கொண்டிருந்தது. "ராஜாத்தி! தம்பி சிரிக்கிறான் பாரு!" என்று தன் தங்கை ராஜாத்தியின் கவனத்தைக் குழந்தையின் விளையாட்டுக்குத் திருப்பினாள் முனியம்மாள்.

அப்பொழுது கவலை நிறைந்த முகத்துடன் குடிசைக்குள் நுழைந்தாள் முனியம்மாளின் தாய் செல்லாயி. உள்ளே நுழைந்த செல்லாயி தன் குழந்தை சின்னஞ்சிறு கையையும் காலையும் அப்படியும் இப்படியுமாக ஆட்டிக் கொண்டு தன் அழுதவாயைத் திறந்து மோகனப் புன்னகை புரிவதைப் பார்த்தவுடன் தன் கவலை எல்லாவற்றையும் மறந்தாள். "அட என் ராசா!" என்று அன்பும் ஆசையும் பொங்கக் குழந்தையை வாரி அணைத்து உச்சி முகர்ந்து முத்தமிட்டு மகிழ்ந்தாள். கடவுளின் சக்தியை என்னவென்று சொல்லுவது! செல்லாயி தன்னுடைய துக்கத்தையும் துயரத்தையும் மீளாத கவலையையும் ஒரு கணம் தன் அருமைக் குழந்தையின் மோகனப் புன்சிரிப்பிலே மறந்து விட்டாள்.

தாயைக் கண்ட சிறுமி ராஜாத்தி "அம்மா, பசிக்குது! அம்மா, பசிக்குது!" என்று அலற ஆரம்பித்து விட்டாள். அடுத்த கணம் செல்லாயியைக் கவலை பிடித்துக் கொண்டது. கையிலிருந்த குழந்தையை முனியம்மாளிடம் கொடுத்து விட்டு ராஜாத்தியைத் தூக்கி அணைத்துக் கொண்டாள். அடுப்பில் பூனை

தூங்கும் போது அழும் குழந்தைக்கு அவளால் எப்படிச் சோறு போட முடியும்! செல்லாயி வாயைத் திறக்கவில்லை. அவள் கண்களில் தாரை தாரையாகக் கண்ணீர் பெருகியது. சிறுமி ராஜாத்தி தாயின் பரிதாப நிலைமையை உணர்ந்தாளா! பசியின் வேதனை தாங்காது "அம்மா, பசிக்குது! அம்மா, பசிக்குது!" என்று மீண்டும் கதற ஆரம்பித்து விட்டாள்.

செல்லாயிக்குத் தான் வேலை செய்யும் எஜமானியம்மாள் வீட்டுக்குப் பக்கத்து வீட்டில் தினந்தோறும் பார்க்கும் காட்சி நினைவுக்கு வந்தது. அந்த வீட்டுக் குழந்தை "நான் சாப்பிட மாட்டேன்" என்று பிடிவாதம் பிடிக்கும். அந்தக் குழந்தையின் தாயோ தன் கையிலிருக்கும் பாலும் சோற்றை அந்தக் குழந்தைக்குப் பலவந்தப்படுத்தி ஊட்டுவாள். இந்த நினைவு அவள் கண்களில் மேலும் கண்ணீரைப் பெருக்கி விட்டது.

என்ன உலகம் இது! ஒரு புறம் வெள்ளிக் கிண்ணத்தில் பாலும் சோறும் போட்டுக் "கொஞ்சம் சாப்பிடு! கொஞ்சம் சாப்பிடு!" என்று கொஞ்சிக் கொஞ்சி ஊட்டி வளர்க்கிறார்கள் குழந்தையை. இன்னொரு புறம் 'பசி! பசி!' என்று கதறிச் சாகிறது குழந்தைகள்.

தன் குடும்பத்தின் பஞ்ச நிலைமை தெரிந்திருந்தும் தன்னையும் மீறி "ஏன், செல்லாயி! குழந்தைக்குக் கொஞ்சம் சோறு போடக் கூடாதா!" என்று கேட்டுக் கொண்டே குடிசைக்குள் நுழைந்தான் செல்லன். நாள் முழுவதும் தன் முதலாளிக்கு உழைத்துக் களைத்து வந்த அவனுக்கு அவன் வீடு தரும் வரவேற்பு! பட்டினியும் பசியுமாக வாடி வதங்கிக் கதறும் குழந்தைகள். அந்தக் குழந்தைகளின் பசி தீர்க்க வழி தெரியாமல் நொந்த மனத்துடன் கண்ணீரும் கம்பலையுமாக நிற்கும் அருமை மனைவி. என்ன செய்வான் செல்லன்!

"நான் என்ன பண்ணுவேன்! வீட்டிலே பிடி அரிசி கூட இல்லை. இரண்டு நாளாக அரிசிக் கடன் கொடுத்தவள் வேறு அரிசி கேட்டுச் சண்டை போட்டுவிட்டுப் போயிருக்கிறாள். இன்றுதான் ரேஷனுக்கும் கடைசிநாள். நான் வேலை செய்யும் வீட்டு அம்மாளிடம் போய் அவுங்க காலில் விழுந்தாவது கொஞ்சம் காசு கேட்கலாம் என்று போனேன். அந்த அம்மாளும் வீட்டைப் பூட்டிக் கிட்டு எங்கேயோ போய் விட்டாங்க" என்று மூச்சு விடாமல் சொல்லி நிறுத்தினாள் செல்லாயி.

செல்லன் செயலற்று மௌனமாக நின்று கொண்டிருந்தான்.

"இன்றைக்கு அரிசி வாங்கி வந்தால் தான் சாப்பாடு. இல்லையேல் எல்லாரும் பட்டினி தான்" என்றாள் செல்லாயி கம்மிய குரலில்.



குடிசைக் கூரையில் செருகியிருந்த ரேஷன் கார்டை எடுத்துக் கொண்டு "சரி, பார்க்கிறேன்" என்று சோகம் கலந்த குரலில் சொல்லி விட்டு, செல்லன் ஒரு நீண்ட பெருமூச்சு விட்டான். மறு கணம் தான் வேலை பார்க்கும் ராவ் பகதூர் பங்களாவை நோக்கி வேகமாக நடந்தான்.

செல்லன் ராவ்பகதூர் ராமநாதம் பிள்ளை வீட்டில் வேலை செய்து வந்தான். காலையில் ராவ்பகதூர் வீட்டுத் தோட்டத்தில் இருக்கும் குரோட்டன்ஸ் செடிகளுக்குத் தண்ணீர் விடுவது, வீட்டுக்கு வேண்டிய சில்லறை வேலைகளைச் செய்து கொடுப்பது, அவர் குழந்தைகளைக் கொண்டு போய்ப் பள்ளிக்கூடத்தில் விடுவது, அவர்கள் வீட்டு நாயைக் குளிப்பாட்டி நடு வீட்டில் விடுவது, இன்னும் ராவ் பகதூர் வீட்டில் என்ன என்ன சொல்லுகிறார்களோ அவ்வளவையும் செய்ய வேண்டியது. இவைதான் அவனுடைய வேலை. இத்தனைக்கும் செல்லன் பெற்று வந்த சம்பளம் மாதம் பதினைந்து ரூபாய். அதையும் ராவ்பகதூர் மாதா மாதம் கொடுக்கும் தோரணையே அலாதியாக இருக்கும். முதல் தேதி யன்று பதினைந்து ரூபாய் நோட்டைச் செல்லனின் முகத்திலே ராவ்பகதூர் தூக்கி எறிவார். பணம் படைத்து விட்டோம் என்ற அகம்பாவம்! அதைப் பொறுக்கி எடுத்துக் கொண்டு வந்து தானும் தனது மனைவியும் மூன்று குழந்தைகளுமாகக் குடும்பம் நடத்த வேண்டும்.

ராவ்பகதூரின் வீட்டை நோக்கி வந்து கொண்டிருந்த செல்லனின் மனக்கண் முன்பு பழைய சம்பவங்கள் எல்லாம் ஒன்றன் பின் ஒன்றாக மோதி அடித்துக்கொண்டு வந்தன.

## 2

செல்லன் சென்னைப் பட்டணத்தில் ஒரு பெரிய வியாபாரியின் வீட்டில் வேலைக்காரனாக இருந்தான். வேலைக்காரன் தான் என்றாலும் அங்கு அவன் வைத்ததுதான் சட்டம். சிலர் செல்லனை வேலைக்காரன் என்றால் நம்பக்கூட மாட்டார்கள். அவனுக்கு வயது இருபத்தைந்து இருக்கும். கொழு கொழு வென்று வளர்ந்திருந்த இளங் காளைபோல இருந்தான். இளமையின் மிடுக்கு அவனுடைய ஒவ்வொரு அங்கங்களிலும் துள்ளி விளையாடிக் கொண்டிருந்தது. வாட்ட சாட்டமான உருவத்துடன் நல்ல கைதேர்ந்த கலைஞனால் கடைந்தெடுத்தவன் போல சிவந்த மேனியாக இருந்தான். அவனைப் பார்த்தவர்கள் சிறிது நேரம் பார்த்து வியந்து கொண்டே இருப்பார்கள்.

ஒரு நாள் மாலை. செல்லன் கடற் கரையில் உட்கார்ந்து பொங்கி வரும் அலை

கடலின் அழகைப் பார்த்துக்கொண்டிருந்தான். ஆம், அப்படிப் பார்ப்பதில் ஒரு ஆனந்தம் இருக்கத்தான் செய்யும். துக்கமும் துயரமும் உள்ளவர்களுக்கு மன ஆறுதலும், கவலையற்றவர்களுக்கு மேலும் இன்பத்தையும் சந்தோஷத்தையும் கொடுக்கும் சக்தி அந்த மாகடலுக்கு உண்டு. அந்த இன்பத்தை அனுபவித்துக் கொண்டு தனிமையில் உட்கார்ந்திருந்தான் அவன். அஸ்தமன சூரியனின் பொன் ஒளி சிறிது சிறிதாக மங்கிக்கொண்டிருந்தது. செல்லன் தன்னுடைய எதிர்காலத்தை எண்ணி மனக் கோட்டை கட்டிக் கொண்டிருந்தான்.

"செல்லா! என்ன யோசித்துக்கொண்டிருக்கிறாய்!" என்று கேட்டுக்கொண்டு வந்தான் அவன் சிநேகிதன் சிங்காரம்.

செல்லன் அவனைத் திரும்பிப் பார்த்து ஒரு புன்னகை புரிந்தான்.

"என்ன, செல்லா! உனக்குக் கல்யாணம் என்று கேள்விப்பட்டேனே! என்னை யெல்லாம்கூட மறந்து விட்டாயே!" என்று கேட்டான் சிங்காரம்.

"உன்னை மறப்பதா! நாளைக்கு வந்து உன்னிடம் சொல்லணும் என்று நினைத்திருந்தேன். நீயே வந்து கேட்டு விட்டாய்!"

"கல்யாணம், எப்பொழுது! இங்கேயா! இல்லை.. உங்கள் ஊரிலேயா!"

"கல்யாணம் எங்கள் கிராமத்திலேதான். நாளைத் திங்களுக்கு அடுத்த திங்கள் நாள் வைத்திருக்கிறது. நீ கட்டாயம் வரவேணும்."

"அதற்கென்ன! வந்து விடுகிறேன். நீ எப்பொழுது ஊருக்குப் போகப் போகிறாய்!"

"நாளைக்குப் போகலாம் என்றிருக்கிறேன். ஒரு வாரத்துக்கு முன்னாலே கிராமத்துக்குப் போனால்தான் சௌகரியமாயிருக்கும். நான் ஊருக்குப் போய்த்தான் கலியாணத்துக்கு வேண்டிய எல்லாக் காரியங்களையும் செய்ய வேணும்" என்றான் செல்லன். அவன் முகத்திலே மகிழ்ச்சி பொங்கிக் கொண்டிருந்தது. கல்யாணம் செய்து கொண்ட பிறகல்லவா தெரியும் அதிலிருக்கும் சுகம்!

"செல்லா! கலியாணம் ஆனபிறகு இந்தச் சிங்காரத்தை மறந்து விடாதே!" என்று சொல்லி, செல்லனிடம் விடைபெற்றுக் கொண்டான் அவன் நண்பன் சிங்காரம்.

சென்னை நகரில் டிராம் வண்டியையும் தார் ரோட்டையும் பரபரவென்றிருக்கும் பட்டணத்து மனிதர்களையும் பார்த்துப் பார்த்து அலுத்துப்போன செல்லனுக்கு, கிராமத்தின் பசுமையும் அங்குள்ள மக்களின் எளிமையும் மனத்தைக் கவர்ந்தது. கிராமத்தை ஒட்டி ஓடிக் கொண்டிருக்கும் ஆற்றங்கரைக்குப் போனான். கரையோரமாக வளர்ந்திருந்த பிரம்மாண்டமான அரச மரத்தின் வேரில் உட்கார்ந்து ஆற்றையே பார்த்துக் கொண்டிருந்தான். ஆற்றில் சுற்றிச் சுழன்று ஓடும் தண்ணீரையும் ஆற்றுக்குத் தண்ணீர் மொண்டு போவதற்காக வரிசை வரிசையாக வரும் பெண்களையும் அவர்கள் தண்ணீரை மொண்டு குடத்தைத் தூக்கி இடுப்பில் வைத்துக் கொண்டு ஆடி அசைந்து செல்லும் அழகையும் அப்படிப் போகும்போது அவர்கள் ஒருவரை ஒருவர் கேலி செய்து கொண்டும் சிரித்துக் கொட்ட மடித்துக் கொண்டு குதூகலமாகச் செல்லும் அற்புதக் காட்சியையும் பார்த்து வியந்த வண்ணம் உட்கார்ந்து கொண்டிருந்தான்.

பட்டணத்திலே குழாய்த் தண்ணீருக்குக் குடத்தை வைத்து விட்டு ஓயாமல் சண்டையிடும்






பெண்களின் கோரத்தைப் பார்த்து அலுத்துப்போன அவனுக்கு இந்தக் காட்சி எவ்வளவோ இன்பமாக இருந்தது. தன்னை மறந்து உட்கார்ந்திருந்தான். இப்படி எத்தனை நாழிகை உட்கார்ந்திருந்தானோ! 'களுக்'கென்று சிரிப்பொலி கேட்டுத் திரும்பிப் பார்த்தான்.

இளமையின் அழகு முகத்திலே துள்ளலாகவுமாக இடுப்பிலே குடத்தைச் சாய்த்து வைத்துக் கொண்டு சற்றுக் கோணலாக நின்றுகொண்டிருந்தாள் செல்லனின் அத்தை மகள் செல்லாயி. அந்த மோகனக் காட்சியில் சொக்கி மரத்தோடு மரமாக அசைவற்றிருந்தான் செல்லன்.

"என்ன அத்தான்! அப்படியே விழுங்கி விடுவதுபோல பாக்கிறீங்க!" என்று குறும்புத்தனமாகக் கேட்டாள் செல்லாயி.

செல்லனுக்கு என்ன பதில் சொல்லுவது என்றே தெரியவில்லை. மௌனமாக எழுந்து நின்று சுழன்று சுழன்று ஓடும் ஆற்றுத் தண்ணீரைப் பார்த்தான்.

"பட்டணத்தான் மாதிரி ஆற்றுத் தண்ணீரை முறைத்துப் பார்க்கிறீங்களே!" என்று கேட்டுக் கலகலவென்று சிரித்தாள் செல்லாயி.

"ஆற்றுத் தண்ணீரைப் பார்த்து நான் அசந்து போகல்லே. உன்னைப் பார்த்து வியந்தும் போகல்லே. பட்டணத்திலே இருக்கும் பெரிய கடலையும் அங்குள்ள நாகரிகமான மனிதர்களையும் பார்த்த எனக்கு இதெல்லாம் ஒரு அதிசயமா!" என்றான் செல்லன்.

"பெரிய கடல் கடலுன்னு பேசுறீங்களே! கடல் தண்ணியை என்ன செய்வது! தாகத்துக்கு ஒரு வாய் குடிக்க முடியுமா! எங்க ஆற்றுத் தண்ணியை அள்ளி அள்ளிக் குடிக்கலாமே" என்றாள் செல்லாயி.

"அதிருக்கட்டும், செல்லி! பத்து வருஷத்திலே, அடேயப்பா! நீ எப்படி மாறிப் போயிருக்கிறே தெரியுமா! இடுப்பிலே பாவாடைத் துண்டைக் கட்டிக்கிட்டு என் தோள் மீது விளையாடிய செல்லியா நீ என்று எனக்குச் சந்தேகமா யிருக்குது" என்றான் செல்லன்.

"நீங்க வளர்த்தீங்களே பசுங் கிடாரி அது கூட நாலு கன்று போட்டு விட்டது. நீங்களும்தான் அடையாளந் தெரியாமே வளர்ந்திருக்கிறீங்க......" என்றாள் செல்லாயி.

"என்னையும் உனக்கு அடையாளம் தெரியல்லேயா!" என்று கேட்டான் செல்லன்.

நாணத்தால் 'குப்' பென்று முகம் சிவக்க ஒரு புன் முறுவலை அள்ளி வீசினாள் செல்லாயி.

அந்தப் புன் முறுவலில் போதை கொண்டவன் போலத் தன்னை மறந்து மெதுவாக செல்லியை நெருங்கினான் செல்லன்.

"அத்தான்! அடுத்த ஞாயிற்றுக்கிழமை வரைக்கும் கொஞ்சம் பொறுத்துக்குங்க" என்று சொல்லி ஆற்றை நோக்கி மான்குட்டி போல துள்ளி ஓடினாள் செல்லாயி.

செல்லன் அவள் பின்னாலேயே சென்று இடுப்பில் இருந்த குடத்தை எட்டிப் பிடுங்கினான். குடம் நழுவிக் கீழே விழுந்து குடு குடு வென்று உருண்டோடி அருகிலிருந்த ஆற்றில் விழுந்து விட்டது.

ஆற்றில் விழுந்த குடம் தண்ணீர் வேகத்தில் ஆற்றோடேயே போகத் தலைப்பட்டது.

அதைப் பார்த்த செல்லாயி "அத்தான், அத்தான்! குடம் ஆற்றோடு போகுதே அதைக் கொஞ்சம் எடுத்துக் கொடுங்களேன்!" என்று கெஞ்சினாள்.

செல்லன் சிரித்தான்.

"நான் வீட்டுக்குப் போய் அத்தான் குடத்தைப் பிடுங்கி ஆற்றிலே போட்டுட்டாங்கன்னு

சொல்லுகிறேன்" என்று சொல்லிச் 'சடக்'கென்று திரும்பினாள் செல்லாயி.

உண்மையாகவே வீட்டுக்குப் போய்ச் சொல்லி விடுவாளோ வென்று பயந்த செல்லன் ஆற்றோடு போன குடத்தை எடுத்து அதில் தண்ணீரையும் மொண்டு வந்து செல்லாயியிடம் கொடுத்தான்.

தண்ணீர்க் குடத்தை வாங்கித் 'தங்'கென்று இடுப்பில் வைத்துக் கொண்டு 'தந்தப் பதுமை போல அசைந்து அசைந்து நடந்து சென்றாள் செல்லாயி. அவளைப் பெருமையோடு பார்த்துப் பூரித்துப் போனான் செல்லன்.

செல்லாயியுடன் தான் சென்னைப் பட்டணத்திலே குடித்தனம் நடத்தப்போகும் குதூகலத்தை நினைத்துச் சந்தோஷப்பட்டான்.

*     *     *

செல்லாயியைக் கலியாணம் செய்து கொண்டு செல்லன் சென்னைக்கு வந்ததும் அவனுக்குச் சென்னை நகரமே ஒரு சொப்பன புரி போலக் காட்சி அளித்தது. செல்லாயியைச் சென்னைப் பட்டணத்தின் எல்லா இடங்களுக்கும் அழைத்துப்போனான். சினிமாவுக்கு அழைத்துப் போனான். செத்த காலேஜுக்கு அழைத்துப் போனான். உயிர்க் காலேஜுக்கு அழைத்துப்போனான். மைலாப்பூரைக் காண்பித்தான். 'லைட்ஹவுசை'க் காண்பித்தான். கடற்கரை மணலிலே உட்கார்ந்து காதல் வார்த்தைகள் பேசினான். இப்படி இவர்களுடைய இல்லற வாழ்க்கை இன்ப வாழ்க்கையாகவே இருந்தது. அந்த ஆனந்த வாழ்க்கை அதிகரிக்க மகள் ஒருத்தி பிறந்தாள். செல்லாயி தன் குல தெய்வமான முனீஸ்வரனின் பெயரைத்தான் வைக்க வேண்டும் என்று ஒற்றைக் காலில் நின்று முனியம்மாள் என்று பெயர் வைத்து மகிழ்ந்தாள். இந்தக் குடும்பத்தின் சந்தோஷத்தைத் தாங்க முடியாமல்தானோ என்னவோ உலக யுத்தம் வந்தது. அதுவும் எப்படி! செல்லனின் இன்ப வாழ்க்கைக்கு யமனாக வந்தது.

செல்லன் இதுவரை வேலை பார்த்து வந்த வியாபாரிக்கு அந்த யுத்தத்தில் பெருத்த நஷ்டம் வந்து விட்டது. நஷ்டத்தால் ஏற்பட்ட கடன் சுமை தாங்காமல் மனம் நொந்து மாரடைப்பால் இறந்து போனார் அந்த வியாபாரி. செல்லன் அநாதையாகி விட்டான். செல்லனும் செல்லியும் வேலை யில்லாமலே சென்னைப்பட்டணத்தில் கஷ்டப்பட்டார்கள். வேலையைத் தேடி செல்லன் அலையாத இடமில்லை. கடைசியில் செல்லாயி ஒரு வீட்டில் வேலை செய்யத் தலைப்பட்டாள். செல்லன் பதினைந்து ரூபாய் உத்தியோகத்தில் ராவ்பகதூர் வீட்டில் வேலைக்காரனாக அமர்ந்தான். வைகில் உணவுப் பஞ்சம் வேறு வந்தது. அத்துடன் செல்லனுக்கு அடுத்தடுத்து இரண்டு குழந்தைகள் பிறந்தன. செல்லனும் செல்லாயியும் நடத்தி வந்த இன்ப வாழ்க்கை சிதைந்து சின்னாபின்னமாய் விட்டது.

## 3

"அப்பா! அதோ செல்லன் வருகிறானே!" என்ற ராவ்பகதூரின் மகள் மங்களத்தின் குரல் செல்லனின் சிந்தனையைக் கலைத்தது. தான் ராவ்பகதூர் வீட்டுப் பங்களாவின் தோட்டத்தில் இருப்பதை உணர்ந்தான் செல்லன்

"இந்த நேரத்தில் எங்கே வந்தாய் செல்லா!" என்று கேட்டார் ராவ்பகதூர்.

"இந்த வாரத்து ரேஷன் வாங்கப் பணம் இல்லீங்க" என்று தன் முப்பத்திரண்டு பல்லையும் காட்டிக் கெஞ்சினான் செல்லன்.

"உனக்கு எப்பப் பார்த்தாலும் பணம், பணம்தான்! பணத்துக்கு நான் எங்கே போவேன்! இன்னும் பத்துத் தேதிகூட ஆகவில்லை. அதற்குள்ளேயே பணத்துக்கு வந்து விட்டாயே. என்னிடம் பணம் கினம் ஒன்றும் கிடையாது" என்று கத்திவிட்டுத் திரும்பிச் சென்றார் ராவ் பகதூர்.

"வீட்டிலே குழந்தை குட்டி எல்லாம் பட்டினி. நீங்கதான் காப்பாத்தணும்" என்று கெஞ்சிக் கேட்டுக் கொண்டே அவரைப் பின் தொடர்ந்தான் செல்லன்.

அவனுடைய சோகச் சொற்கள் ராவ்பகதூரின் காதில் ஏறவில்லை.

ரேஷன் கார்டும் கையுமாக கண்ணீர் வடிய நின்று கொண்டிருந்தான் செல்லன்.

ராவ்பகதூரின் மகள் மங்களம் தன் அருமை நாய்க் குட்டிக்கு 'ஓவல்டின்' ரொட்டியைக் கொடுத்துக் கொண்டிருந்தாள். அடடா! அந்த நாயை விட அல்லவா மனிதர்கள் கேவலமாகப் போய் விடுகிறார்கள். ஆம், எல்லாம் பணநாதன் அருள்தான்!

"செல்லா! ஏன் இங்கு நின்று கொண்டிருக்கிறாய்! போ!" என்று சத்தம் போட்டு விட்டு அங்கிருந்த சாய்வு நாற்காலியில் சாய்ந்து விட்டார் ராவ்பகதூர்.

வேறு வழி ஒன்றும் தோன்றாத செல்லன் தன் கால் போன வழி போய்க் கொண்டிருந்தான். அவன் உள்ளம் வேதனையால் குமுறிக் கொண்டிருந்தது. 'பசி! பசி!' என்று கதறும் அவனுடைய குழந்தைகளின் சோக முகமும் அதைத் தவிர்க்க முடியாமல் தவிக்கும் தன் அருமை மனைவியின் கவலை தோய்ந்த முகமும் தோன்றி அவன் உள்ளத்துக்கு மேலும் மேலும் வேதனையைக் கொடுத்தன.

"செல்லா செல்லா!" என்ற குரல் கேட்டுத் திரும்பிப் பார்த்தான்.

ராவ்பகதூர் வீட்டுச் சமையற்காரக் கிழவி நின்று கொண்டிருந்தாள். மாதம் பத்து ரூபாய் சம்பளத்தில் ராவ்பகதூர் வீட்டில் சமையல் வேலைசெய்து வருகிறாள் அவள். அவளுக்குச் செல்லன் மீது எப்பொழுதுமே கொஞ்சம் இரக்கம் உண்டு. ராவ்பகதூர் வீட்டுக்குத் தெரியாமல் பல தடவை செல்லனுக்குச் சாப்பாடுகூடப் போட்டிருக்கிறாள். அந்தச் சமையல்காரப் பாட்டியைப் பார்த்தவுடன் "ஏன் அம்மா கூப்பிட்டீங்க?" என்று ஒரு விரக்தியான குரலில் கேட்டான் செல்லன்.

கிழவி தன் புடவைத் தலைப்பில் முடிந்து வைத்திருந்த இரண்டு ரூபாயை அவிழ்த்துச் செல்லனிடம் கொடுத்தாள்.

"செல்லா! நீ ஐயா கிட்டே பணம் கேட்கும்போது நானும்பார்த்துக்கிட்டே இருந்தேன். என்கிட்டே இருக்கிறது இவ்வளவுதான். எடுத்துக்கிட்டுப் போய்க் குழந்தைகளைப் பட்டினி

போடாமல் சாப்பாட்டுக்கு ஏற்பாடு செய்" என்று அன்பு கலந்த குரலில் சொன்னான்.

"அன்ன லக்ஷ்மி நீங்கள். உங்களுக்கு நான் என்ன செய்யப் போகிறேன்" என்று நன்றியுடன் சொல்லிக் கிழவியிடம் விடைபெற்று விரைந்து சென்றான். அவன் மனம் கிழவியின் அன்பையும் தயாளத்தையும் பற்றி நினைத்துக் கொண்டே இருந்தது.

"ஏழைகளுக்குத்தான் இரக்க உணர்ச்சி இருக்கிறது. அன்பு இருக்கிறது. பிறருக்கு உதவி செய்ய வேணும் என்ற ஆர்வம் இருக்கிறது. கூடிய வரையில் உண்மையோடும் நடந்து கொள்கிறார்கள். பணம் படைத்தவர்கள் இரக்கமற்றவர்கள். உணர்ச்சியற்ற கடின உள்ளம் படைத்தவர்கள். வெறும் பணத்துக்கு அடிமைகளாக இருக்கிறார்கள்" என்று ஆத்திரத்தோடு சொல்லிக் கொண்டே செல்லனுக்கு எதிரில் இரண்டு பேர் வந்தனர். அந்த வாசகம் செல்லனின் இதயத்தைத் தொட்டுவிட்டது. "ஆகா! அவர்கள் வார்த்தையில் எவ்வளவு உண்மையிருக்கிறது" என்று நினைத்துக் கொண்டே ரேஷன் கடையை நோக்கி வேகமாகச் சென்றான் செல்லன்.

"பசி, பசி" என்று அலறி விட்டு அசந்து படுத்து விட்டாள் ஈறுமி ராஜாத்தி. செல்லாயி செல்லனை எதிர்பார்த்து ஏங்கியபடி தன் அழும் குழந்தையை மடியில் வைத்துக் கொண்டு உட்கார்ந்திருந்தாள். அவள் அருகில் பசி தாங்காது அழுத கண்ணும் சிந்திய மூக்குமாக நின்று கொண்டிருந்தாள் முனியம்மாள்.

செல்லன் தன் குடிசைக்கு ரேஷன் அரிசியோடு வருவதற்கும் அடுத்த குடிசைக்காரி தான் கொடுத்த கடன் அரிசியைத் திருப்பிக் கேட்க மறுபடியும் வருவதற்கும் சரியாக இருந்தது. செல்லாயி தன் மடியிலிருந்த குழந்தையை முனியம்மாளிடம் கொடுத்தாள். அடுத்த குடிசைக்காரிக்குக் கொடுக்க வேண்டிய கடன் அரிசியைக் கொடுத்து அவளை அனுப்பி வைத்தாள் பாக்கி இருந்தது கொஞ்சம் உடைத்த சோளம்தான். அதை அவசரம் அவசரமாக நோம்பிப் புடைத்தாள். அடுப்பை மூட்டி அந்தச் சோளத்தைக் கூழாகக் காய்ச்சினாள்.

கூழைக் காய்ச்சி முடிந்தவுடன் 'பசி, பசி' என்று அழுத தன் சின்ன மகள் ராஜாத்தியைப் பார்த்தாள். பாவம் குழந்தை அழுத களைப்பும் பசியின் சோர்வும் சேர்ந்து துவண்டுகிடந்தது. ராஜாத்தியைத் தூக்கி எடுத்து வந்து கொஞ்சம் கூழை, கிண்ணத்தில் ஊற்றிக் குழந்தைக்கு ஊட்டிக் கொண்டே "அத்தான்! அடுப்பிலே சோளக்கூழ் காய்ச்சி வைத்திருக்கேன். சாப்பிட வாங்க!" என்று செல்லனைக் கூப்பிட்டாள்.

செல்லனுக்கும் தாங்க முடியாத பசி. சோளக் கூழின் மணத்தை அனுபவித்துக் கொண்டே உள்ளே வந்தான். வந்தவன் குழந்தையை ஏணையில் போட்டுத் தூங்க வைத்துக் கொண்டிருந்த தன் மூத்த மகள் முனியம்மாளைக் கூப்பிட்டு அவளுக்குக் கொஞ்சம் கூழை ஒரு கிண்ணத்தில் ஊற்றிக் கொடுத்து விட்டு, தானும் வயிறார சாப்பிட்டு எழுந்தான். மீதி கொஞ்சம் கூழ்தான் செல்லாயிக்கு இருந்தது.

"செல்வி! நான் ராஜாத்திக்குக் கூழ் கொடுக்கிறேன். நீ போய்ச் சாப்பிடு" என்று அன்பும்



"என்ன ஸார் இது! பேப்பரில், பேபியின் நடனத்தை இப்படி விமர்சனம் எழுதி இருக்கிறார்கள்! 'பேபி கருணையைத் தலைவர் விமரிசையாகத் தாலாட்டினார்' என்று போட்டிருக்கிறதே!"

"பெரியவர்களாக இருந்தால் பாராட்டினார் என்று போடுவார்கள். பச்சைக் குழந்தை நடனம் ஆடியதால் 'தாலாட்டினார்' என்று போட்டிருக்கிறது!"

ஆதரவும் கலந்த குரலில் சொல்லி அவள் கையிலிருந்த கூழ்க் கிண்ணத்தைத் தான் வாங்கிக் கொண்டாள்.

அந்த சமயம் 'தடார்' என்ற சத்தம் கேட்டது. செல்லனும் செல்லாயியும் திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தனர். கூழ்ப்பானை உடைந்து கூழெல்லாம் அடுப்படியில் சிந்திக் கிடந்தது.

தன் பசியை ஆற்றிக் கொள்ள எலியைப் பிடிக்கத் தாவிய பூனை கூழ்ப் பானையை உருட்டி விட்டது. பட்டினியும் பசியும், துக்கமும் துயரமும் சூழ அவசரம் அவசரமாகக் கூழ் காய்ச்சிய செல்லாயிக்குக் குடிக்கக் கூழ் இல்லை. என்ன பரிதாபம்!

செல்லன் தன் அருமை மனைவியின் வாடிய முகத்தைப் பார்த்தான். தாங்க முடியாத கோபத்தோடு பக்கத்தில் கிடந்த தடியை எடுத்துப் பூனையை அடிக்கத் தாவினான்.

"ஐயோ, அத்தான்! அதை அடிக்காதிங்க. அது என்ன பண்ணும்! அதை அடித்ததினாலே அடுப்பிலே போன கூழ் வந்துடுமோ!" என்று செல்லனின் கையைப் பிடித்தாள் செல்லாயி.

செல்லனுக்கு ஒன்றும் புரியவில்லை. மௌனமாக இருந்தான். அவன் முகம் கோபத்தால் சிவந்திருந்தது.

செல்லாயி குடிசையைப் பெருக்கிப் பாயை விரித்துப் போட்டுக் குழந்தைகளைப் படுக்க வைத்தாள். பசி தீர்ந்த குழந்தைகளின் முகத்தைப் பார்த்த போது அவள் மனம் நிம்மதியாக இருந்தது. "நல்ல வேளை 'அவுங்க'ளாவது முன்னாடியே சாப்பிட்டாங்களே" என்று நினைத்தவுடன் அவளுக்குத் தானும் சாப்பிட்டது போன்ற ஒரு திருப்தி ஏற்பட்டது.

செல்லாயியைப் போல எத்தனை செல்லாயிகள் தங்கள் குழந்தைகளும் கணவரும் சாப்பிட்டதை மட்டும் நினைத்துத் திருப்தியடைகிறார்களோ! அவர்களும் வயிறார சாப்பிட்டுத் திருப்தியடையும் காலம் வருமா!

# படித்துப் பாருங்கள்!

## கிருஷ்ணமூர்த்தி சொற்பொழிவு காசி 1949-

“நேற்று நடந்த பிரசங்கத்துக்கு நீங்கள் ஏன் ஸார், வரவில்லை! அந்தத் தத்துவப் பேராசிரியர் எவ்வளவு நன்றாகப் பேசினார்! அடாடா! கேட்கக் கொடுத்து வைத்திருக்க வேணடுமே!” என்றார் ஒருவர்.

இதைக் கேட்டுக் கொண்டிருந்தவர் “அப்படி என்ன அந்தத் தத்துவப் பேராசிரியர் பேசினார்! கொஞ்சம் சொல்லுங்களேன்!” என்றார்.

அவ்வளவுதான்; முதல்வர்பாடு திண்டாட்டமாகப் போய்விட்டது. “அவ்வளவு பெரிய தத்துவப் பேராசிரியர் பேசுவதெல்லாம் நமக்கு விளங்கி விடுமா, ஸார்!” என்று ஆத்திரத்துடன் திருப்பிக் கேட்டு விட்டார்.

பொதுவாக, தத்துவப் பேராசிரியர்கள் பேச்செல்லாம் இப்படித்தான் கேட்பவர்களுக்குப் புரியாமலிருக்கும்.

இவர்களுக்கு நேர்மாறானவர் ஸ்ரீ ஜே. கிருஷ்ணமூர்த்தி. விஷயத் தெளிவுள்ளவர்; சிறந்த சிந்தனையாளர். தாம் கண்ட முடிவுகள் கேட்பவருக்குப் புரிய வேண்டும் என்ற ஆவல் மிகுந்தவர். தம் உள்ளத்தில் உதிப்பனவற்றை யெல்லாம் அவர் வார்த்தைகளில் கொட்ட விரும்புவதில்லை. கேட்போரின் உள்ளத்திலிருக்கும் ஐயங்கள், பிரச்னைகள் இவற்றைப் போக்கவே அவர் விரும்புவார். ஆகவே அவர் மேடைப் பிரசங்கங்கள், வார்த்தைப் பந்தல்கள் போடுவதற்குப் பதில் சில நண்பர்களுடன் கூடி அளவளாவுவதை மிக்க பயனுள்ள முறையாகக் கருதுகிறார்.

அந்த முறைப்படி 1949-ம் ஆண்டு காசியில் சில நண்பர்களுடன் ஆறு வாரங்கள் பல பிரச்னைகளைப் பற்றி அளவளாவிப் பேசியதைப் புஸ்தகமாகத் தொகுத்து இப்பொழுது வெளியிட்டிருக்கிறார்கள்.

ஜே. கிருஷ்ணமூர்த்தி காலஞ்சென்ற அன்னிபெஸண்ட் அம்மையாரின் பேரன்புக்குப் பாத்திரமானவர். பிரம்மஞான சங்கத்தில் பல வருஷ காலம் தொடர்பு பூண்டிருந்தார்.

இந்தப் புஸ்தகம் ஆங்கிலத்திலிருந்து மொழிபெயர்க்கப் பட்ட நூலாயினும் மொழிபெயர்ப்பு வாசனையே விசாமலிருப்பது பாராட்ட வேண்டிய விஷயமாகும். தமிழில் ஒரு நல்ல தத்துவப் புஸ்தகம் வெளி வந்திருக்கிறது என்று தைரியமாகச் சொல்லலாம்.

[கிடைக்குமிடம்: ஆர். மகாதேவய்யர், பொக்கிஷதார், வஸந்த விஹார், அடையாறு, சென்னை—5.]

## சரபேந்திரர் வைத்திய முறைகள்

மாடுகள், குதிரைகள் முதலிய மிருகங்களை வளர்ப்பதற்கு ஓரளவு மிருக வைத்தியமும் தெரிந்திருக்க வேண்டும். அது தெரிந்திருந்தால்தான் அவற்றைச் சரியான முறையில் வளர்க்க முடியும். குதிரை, மாடு, கோழி இவற்றுக்கு வரும் நோயைப் பற்றிய விவரங்களும் அந் நோய்களுக்கு ஏற்ற பரிகாரங்களும் இந் நூலில் கூறப்பட்டிருக்கின்றன.

பண்டைக் காலத்து நூல்களின் பொக்கிஷமாக விளங்கும் புராதன ஓலைச் சுவடிகளிலிருந்து திரட்டி அச்சு வாகனம் ஏற்றப்பட்டிருக்கிறது இந் நூல். விலை ரூ. 2—0—0

## பெருந்தேவனார் பாரதம்

நம் தமிழ் மொழியில் எத்தனையோ நூல்கள் இயற்றியவர் யார் என்று தெரியாமல் இருக்கின்றன. ஒரே பெயருள்ள பல ஆசிரியர்களும் இருந்திருக்கின்றனர். அம்மாதிரி நூல்களுள் இதுவும் ஒன்று. பழைய ஓலைச் சுவடிகளிலிருந்து பதிப்பிக்கப் பெற்றது. சிதைந்துபோன பகுதிகளை நீக்கி மிகுதியுள்ளதைச் சிரத்தையோடு பதிப்பித்திருக்கிறார்கள்.

இந் நூலை இயற்றியவர் சங்க காலத்திய பெருந்தேவனாரா! நந்திவர்மன் காலத்துப் பெருந் தேவனாரா! அல்லது வீர சோழியம் உரையாசிரியரான பெருந்தேவனாரா! — என்னும் ஐயப்பாடு புலவர் பெருமக்களின் ஆராய்ச்சிக்கு உரியது. விலை ரூ. 1—8—0

## இராமப்பய்யன் அம்மானை

திருமலை நாயக்கர் மதுரையில் ஆண்டபோது, தளபதியாகவும், அமைச்சராகவுமிருந்த இராமப்பய்யன் சேதுபதி மன்னரான சடைக்கன் மீது படையெடுத்துச் சென்று, அவரைச் சிறைப் பிடித்து வந்த வரலாற்றை நாடோடிப் பாடலாகப் பாடப்பெற்ற மிக ரஸமான நூல். இந்த நூலில் சடைக்கன் இராமேசுவரத் தீவில் ஒளிந்து கொண்டபோது இராமப்பய்யன் இராமேசுவரத்துக்கு அணைகட்ட முடிவு செய்கிறான். அவன் தன் தலைப்பாகை கட்டிய தலையில் கல் சுமந்து கொண்டு போய்ப் போட்டு அணை கட்ட முற்படுகிறான். இதைக் கண்டார்கள் மற்ற மன்னவர்கள்.

‘இராமனே கல் சுமந்தால்
நாமேதுக்க லாகாதோ?
என்று சொல்லி மன்னர்
எல்லோரும் தான் கூடி
ஏலேலம் மிகப்பாடி
எடுத்தார்கள் கல்லதனை!

இப்படிப்பட்ட செயல் திறமையும் போர்த் திறமையுமுள்ள முன்னோர்களின் வழிவந்தவர்களா நாம் என்ற பெருமிதம் இப் புஸ்தகத்தைப் படிக்கும்போது ஏற்படுகிறது.

[இந்த மூன்று நூல்களும் தஞ்சை சரஸ்வதி மகால் வெளியீடுகள்.]

## அல்—ஸாஹிரா

இது கொழும்பிலிருக்கும் ஸாஹிராக் கல்லூரியின் வருடாந்தர வெளியீடு. இதில் ஆங்கிலம், தமிழ், சிங்கள மொழிகளில் அக்கல்லூரியின் ஆசிரியர்களும் மாணவர்களும் எழுதியுள்ள கட்டுரைகளும், கல்லூரி பங்கெடுத்துக் கொண்ட பலதுறைப்பட்ட அலுவல்களைப் பற்றிய குறிப்புகளும் படங்களும் இருக்கின்றன.

[பிரசுரம்: ஆசிரியர், அல்-ஸாஹிரா, ஸாஹிராக் கல்லூரி, கொழும்பு—10. இலங்கை. விலை: ரூ 1—8—0 தபால் செலவு: 7 அணா.]



# நிழலின் நிழல்

கி.ரா.கோபாலன்



**ப**யங்கரமான ஆங்கில நாவல்களைப் படிப்பதையே தன் வாழ்க்கை லட்சிய மாகக் கொண்டிருந்தான் சேதுராமன். அவனுடைய புத்தக பீரோவைப் பார்த் தால் பேய், பிசாசு, கொலை, குத்து போன்ற வகைகளைச் சித்திரிக்கும் கதைப் புத்தகங்களைத்தான் பார்க்கலாம். இப் படிப்பட்ட புத்தகங்களைப் படிப்பதினால் சேதுராமனே நாளுக்கு நாள் ஒரு பயங் கரமான மனிதனாகி விடுவானோ என்ற சந்தேகம் எனக்கு எப்பொழுதும் உண்டு. எப்பொழுது பார்த்தாலும் அவன் கையில் ஒரு புத்தகமிருக்கும். அது ஏதாவது ஒரு பேயைப் பற்றிய கதையாய் இருக்கும். இல்லாவிட்டால் பயங்கரக் கொலையைப் பற்றிய விஷயமாக இருக்கும். எனக்கு இப்படிப்பட்ட கதைகளைப் படிப்பதில் எப்பொழுதுமே விருப்பம் இருந்ததில்லை. வாழ்க்கையோடு ஒட்டிய சிக்கல்களை விளக்கும் கதைகளைப் படிப்பதில்தான் எனக்குப் பிரியம். வாழ்க்கைக்கு மீறிய அநாயாசமான நிகழ்ச்சிகளை உள்ளடக்க மாகக் கொண்ட கதைகளை நான் படிப் பதே இல்லை. எப்பொழுதாவது பொழுது போகாமல் ஏதாவது படிக்க வேண்டு மென்று தோன்றினால் ஏதாவது என் மனத்திற்குப் பிடித்த புத்தகமாக யாரிட மிருந்தாவது வாங்கி வருவேன். அப்படிக் கிடைக்காவிட்டால் நேராதே என்று சேது ராமனிடம் போய் ஒரு கொலைப் புத் தகமோ பேய்ப் புத்தகமோ எடுத்துக் கொண்டு வருவேன்.

அப்பொழுது என் மனைவி, குழந்தைக ளெல்லாம் ஊரில் இல்லை. வீட்டில் ஒரு வரும் இல்லாத சமயத்தில் இரவு நெடு நேரம் வரையில் எனக்குத் தூக்கம் வருவ தில்லை. அப்பொழுதெல்லாம் ஏதாவ தொரு புத்தகத்தைப் படித்துக்கொண்டே தூங்கி விடுவேன். அந்தச் சமயம் எனக்கு ஏதாவதொரு புத்தகம் வேண்டியிருந்தது. என்னிட மிருந்தவைக ளெல்லாம் நான் படித்து முடித்தவைகள். இரவல் புத்த கம் வாங்க நண்பர்கள் வீட்டை நோக்கிச் சென்றேன். நான் தேடிச் சென்ற நண்பர் களில் ஒருவராவது வீட்டில் இல்லை. கடைசியில் சேதுராமனிடம் தான் வர வேண்டியிருந்தது.

சேதுராமன் "இது ரொம்ப அருமை யான புத்தகம், படி!" என்று சொல்லி என்னிடம் ஒரு புத்தகத்தைக் கொடுத் தான். அந்தக் கதையின் பெயர் 'நிழலின் நிழல்.' மேல் அட்டையில் கொட்டை எழுத்தில் எழுதப்பட்டிருந்தது. பேய் பிசாசு என்றெல்லாம் இல்லாமல் நிழ லோடு விட்டதே என்ற திருப்தியோடு அந்தப் புத்தகத்தைப் பிரித்துக்கூடப் பார்க்காமல் வாங்கிக்கொண்டு வந்தேன்.

இரவு என் காரியங்களை யெல்லாம் முடித்துக் கொண்டு சாவகாசமாகப் படுக் கைக்குப் பக்கத்தில் விளக்கை வைத்துக் கொண்டு புத்தகத்தைப் பிரித்துப் படிக்க ஆரம்பித்தேன்.

புத்தகத்தைப் பிரித்ததும் முதல் பக் கத்தில் பெரிய எழுத்தில் மிகவும் பிர தானமாக ஏதோ எழுதப்பட்டிருந்தது என் கவனத்தைக் கவர்ந்தது.

> 'தயவு செய்து இந்தப் புத்தகத்தை இரவில் படிக்க வேண்டாம். இதை இர வில் படிப்பவர்களுக்கு மிகுந்த மனத் துணிச்சல் இருக்க வேண்டும். இதை இரவில் தனிமையில் படிப்பவர்களுக்கு மூளை குழம்பிப் பைத்தியம் பிடித்தால் அதற்கு இந்தப் புத்தகத்தை எழுதிய ஆசிரியர் பொறுப்பாளி அல்ல.'

இதுதான் அதில் எழுதப்பட்டிருந்தது.

இதைப் படித்ததும் என் மனத்தில் தயக் கம் ஏற்பட்டது. இந்தத் தயக்கத்தைத் தொடர்ந்து சிறிது பயமும் மனத்தில் தலை காட்டியது. அந்தப் புத்தகத்தைப் படிக்க லாமா வேண்டாமா என்று யோசித் தேன். வேளையோ இரவு. அவ்வளவு பெரிய வீட்டில் நான் தனிமையிலிருக் கிறேன். அந்தப் புத்தகத்தைப் படித் தால் அதில் எச்சரிக்கை செய்திருப்பது போல் மூளை குழம்பிப் பைத்தியம் பிடித்து ஏதாவது செய்யப் போகிறதே என்ற பயம். படிக்காமல் இருந்தாலோ

இரவு பொழுது போவது மிகவும் சிரமம். தவிர நம்முடைய மனமே நம்மைக் 'கோழை' என்று இடித்துக் காட்டும்.

மனத்தில் திடத்தை ஏற்படுத்திக் கொண்டு புத்தகத்தைப் பிரித்தேன். ஏதோ ஒரு பெரிய கை வந்து 'படிக்காதே' என்று புத்தகத்தை மறைப்பது போலிருந்தது. மறுபடியும் புத்தகத்தை மூடி மேஜை மீது வைத்துவிட்டேன். புத்தகத்தை வந்து மறைத்த கை எதுவென்று எனக்குத் தெரியவில்லை அது என் மனத்தில் ஏற்பட்ட பீதியினால் தோன்றிய அர்த்தமற்ற நிழலாக இருக்கலாம். நான் அவ்வளவு அதைரியசாலி என்று என்னாலேயே ஒப்புக்கொள்ள முடியாத நிலையில் இருந்தேன். ஆனால் மனத்தில் ஏதோவொரு பயம் இருந்தது. இந்தப் பயத்திற்கு எப்படி என் மனசில் இடமேற்பட்டது என்று அப்பொழுது முடிவு செய்யும் வகையில் நான் இல்லை. உண்மையாகவே அது பயம்தானா என்று சந்தேகப்படலானேன். இப்படிப்பட்ட புத்தகத்தைப் படிப்பதினால் வாழ்க்கையில் அனுபவசியமாக ஒரு பயங்கரமான அனுபவத்துக்கு ஈடு கொடுத்துப் பித்துக்கொண்டு திரிவானேன் என்ற எண்ணம். நான் இரவு வேளையில் தனிமையில் படிக்கப் போகிறேன் என்று தெரிந்திருக்கும் சேதுராமன் இந்தப் புத்தகத்தை ஏன் கொடுத்தான் என்று தெரியவில்லை. ஏதாவது பழி வாங்கவா...? ஒரு வேளை இதன் மூலமாக அவன் என் தைரியத்தைச் சோதனை செய்கிறானோ? என்றெல்லாம் தோன்றியது. உண்மையாகவே என் தைரியத்தை நானே சோதித்து அறிந்து கொள்ள வேண்டிய நெருக்கடியான நிலைமையில் தான் நான் இருந்தேன்.

அப்பொழுது இரவு பத்து மணிக்கு மேலாகிவிட்டது. சுவரிலே மாட்டியிருந்த கடிகாரத்தின் 'டிக் டிக்' என்ற சத்தத்தைத் தவிர வேறு ஒருவிதமான சந்தடியும் இல்லை. விளக்கின் ஒளி என் அறையைப் பிரகாசப் படுத்தினாலும் அந்த இரவின் பயங்கர அமைதியும், என்னுடைய தனிமையும் ஒரு பயங்கரச் சூழ்நிலையைத்தான் உண்டாக்கின. நான் எவ்வளவோ இரவு அந்த வீட்டில் அந்த அறையில் தனிமையில் இருந்திருக்கிறேன். ஆனால் என்றுமில்லாமல் அன்றைக்கு எனது தனிமையின் பயங்கர நிலைமையை என்னால் நன்றாக உணர முடிந்தது.




அந்தப் புத்தகத்தைப் படிப்பதற்கு முன்னாலேயே நான் இப்படி மனம் குழம்புவது எனக்கே வெட்கமாகப் பட்டது. மேஜை மீது இருந்த புத்தகத்தை எடுக்கக் கையை நீட்டினேன். அந்தப் புத்தகம் என் கையில் அகப்படாமல் நகருவது போலிருந்தது. அது உண்மையாக நகர்ந்ததா அல்லது என் கண்களுக்குத் தான் நகருவதுபோல் தோன்றியதா என்று என்னால் தெளிவாக்கிக் கொள்ள முடியவில்லை மனத்திலிருந்த குழப்பத்தில். என் கை அந்தப் புத்தகத்தை எடுக்கத் தயங்கியது. என் கையை ஏதோவொரு சக்தி பின்னுக்கு இழுத்தது.

விளக்கின் வெளிச்சத்தில் அந்த அறையிலிருந்த ஒவ்வொரு பொருளின் நிழலும் ஏதோ பயங்கரமான நிழல்போலத்தான் தோன்றியது. சுவரில் பதிந்திருந்த என்னுடைய நிழலே எனக்குப் பயத்தை உண்டாக்கியது. அது என்னுடைய நிழலா அல்லது வேறு ஏதாவது பேயின் நிழலா என்ற சந்தேகம் எழுந்தது. எனக்குப் பயமாயிருந்ததால் என் பார்வையைத் திருப்பிக் கொண்டேன்.

கடிகாரத்தில் மணி பத்து அடித்தது. அதற்கு மேல் எனக்குக் கண் விழித்திருக்க மனமில்லை. விளக்கு வெளிச்சத்தைச் சிறிதாக்கிவி ்டுத் தூங்கலாமென்று எண்ணினேன். விளக்கின் திரிக் கம்பியைத் தொட்டேன். நான் எதிர்பாராவண்ணம் விளக்கு 'பக்'கென்று நின்றுவிட்டது; எங்கும் ஒரே இருள் அ்பொழுது நானாக விளக்கை அணைத்ததாக என் புத்திக்குப் படவில்லை. என்னைத் தவிர வேறு ஏதோ வந்து ஒரேயடியாக அணைத்து வி ்டதாகத் தான் எனக்குத் தோன்றியது. தீப் பெட்டியைத் தேடி எடுத்து விளக்கை மறுபடியும் ஏற்றலாமா என்று யோசித்தேன். நினைத்தேனே தவிரத் துணிச்சல் இல்லை. தீப் பெட்டியை எங்கு வைத்திருக்கிறேன் என்ற ஞாபகமே இல்லை. அதைத் தேடும்பொழுது ஏதாவது என் கழுத்தை வந்து நெரித்தால்...சட்டென்று போர்வையைத் தலையிலிருந்து கால் வரையில் இழுத்துப் போர்த்திக் கொண்டு தூங்குவதற்குப் பிரயத்தனப்பட்டேன். தூக்கம் வந்தால் தானே?

ஏதேதோ நிழல் உருவங்களெல்லாம் மனக் கண் முன்பு காட்சி யளித்தன.



எட்டு வருஷ காலமாக அந்த வீட்டில் நான் குடி இருக்கிறேன். அந்த வீட்டில் ஒரு பேயோ பிசாசோ உலாவுவதாக இத்தனை நாளாக எனக்குத் தெரியவில்லை. நான் அந்த வீட்டுக்கு வருவதற்கு முன்னால் ஒரு பெரிய குடித்தனக்காரர் அந்த வீட்டில் இருந்தாராம். நான் வருவதற்கு முன்னால் அந்த வீட்டில் ஒரு கொலையோ தற்கொலையோ நடந்ததாகக் கேள்விப்படவே யில்லை. ஆனால் அந்தக் குடித்தனக்காரருக்கு விதவையான இளம் பெண் ஒருத்தி இருந்தாளாம். அவள் திடீரென்று ஒரு நாள் இறந்து விட்டாளாம். அந்தப் பெண் இறந்த ஒரு மாதத்திற்குள் அவர்கள் வேறு இடத்திற்குக் குடி மாறிப் போய் விட்டார்களாம். திடீரென்று ஒருவர் இறப்பதும், ஒரு இடத்தை மாற்றிக் கொண்டு வேறு இடத்திற்குப், போவதும் சகஜம். அதைப் பற்றி யெல்லாம் நான் கவலைப்படவேயில்லை அப்பொழுது. அந்த வீட்டுக்கு வந்து எட்டு வருஷம் எப்படியோ ஓடிவிட்டது. ஆனால் அன்று இரவு அந்த வீட்டில் ஏதாவது பேய் உலாவுமோ என்று சந்தேகம் எழுந்ததற்கு ஆதாரமாக எதையும் குறிப்பாக என்னால் சொல்ல முடியாது. ஆனால் மனத்தில் எழுந்த சந்தேகம் வளர்ந்து கொண்டே போயிற்று.

அந்த வீட்டில் ஒரு காலத்தில் திடீரென்று இறந்துபோன இளம் விதவைப் பெண்ணைப் பற்றிச் சிந்திக்கலானேன். அந்தப் பெண்ணை நான் பார்த்ததே இல்லை. அவள் யாரோ? எப்படி இருப்பாளோ? எப்படித் திடீரென்று இறந்தாளோ? இதெல்லாம் எனக்குத் தெரியாது. அவள் ஒருஇளம் விதவை என்பது வரையில் நிச்சயம். ஒரு இளம் விதவை வாழ்க்கையில் தனக்கேற்பட்ட துயரத்தின் காரணமாகத் தற்கொலை செய்து கொள்ள முயலலாமல்லவா? ஆகையால் அது தற்கொலையாகத்தா னிருக்கும் வாலிப வயதும் தேக திடமும் கொண்ட ஒரு பெண் திடீரென்று இறந்து போகக் காரணம் என்ன? அவள் இறந்த ஒரு மாதத்திற்குள் அந்தக் குடும்பத்தினர் இந்த வீட்டை விட்டு வேறு இடத்திற்குப் போவானேன்?

எனக்கு முதலில் சகஜமாகப் பட்டதெல்லாம் இப்பொழுது விபரீதமாகப் பட்டது. அந்த விதவைப் பெண்ணின் ஆவிதான் அந்த வீட்டை அப்படிச் சுற்றிக்கொண்டிருக்க வேண்டும் என்று நம்பினேன். எப்படியோ அந்தப் பெண்ணின் உருவம் என் மனக் கண்ணின் முன் நின்றது. என்ன பயங்கரம்? அந்த முகத்தில்தான் எவ்வளவு கோரம்? அந்த உருவம் என் கழுத்தை நெரிக்க வருவது போல் தோன்றியது. போர்வையை அரணாக வைத்துக் கொண்டு என் உயிரைக் காப்பாற்றிக் கொள்ள நினைத்தேன். என் உடல் முழுவதும் நடுங்கியது. இருதயம் நின்று விடும்போல் பட பட வென்று அடித்துக் கொண்டது. திணறித் திணறி மூச்சு விட்டேன், போர்வைக் குள்ளிருந்த வண்ணம்.

யாரோ வாசற் கதவை 'தடதட'வென்று இடிப்பதுபோலிருந்தது. உற்றுக் கேட்டேன். யாரோ தட்டுகிறார்கள் என்று தெளிவாகத் தெரிந்தது. யாராக இருக்கலாம். மெதுவாகப்போய்க் கதவைத் திறக்கலாமா என்று யோசித்தேன். ஆனால் துணிவு ஏற்படவில்லை. கதவைத் தட்டுவதை எண்ணும்போது எனக்கொரு பழைய கதை ஞாபகத்துக்கு வந்தது.

விசுவேசுவரன் என்று எனக்கொரு நண்பன் இருந்தான். ராஜேசுவரி என்ற ஒரு பணக்கார வீட்டுப் பெண்ணை அவன் காதலித்தான். அந்தப் பெண்ணும் அவனைக் காதலித்தாள். அவனைக் கல்யாணம் செய்துகொள்ள வேண்டுமென்று ஆவலோடு துடித்துக் கொண்டிருந்தாள் அவள். ஆனால் கல்யாணத்துக்கு எவ்வளவோ தடங்கல் இருந்தது ஏனென்றால் விசுவேசுவரன் ஏழை. அவனுக்கு ராஜேசுவரியை விவாகம் செய்து கொடுக்க அவளுடைய பெற்றோர்கள் சிறிது தயங்கினர். ராஜேசுவரியின் ஞாபகமாகவே இரவில் நெடுநேரம் வரையில் விசுவேசுவரன் தூங்குவதில்லை.

ஒருநாள் இரவு நடு நிசி வேளையில் யாரோ வந்து அவன் வீட்டுக் கதவைத் தட்டுவது போலிருந்தது. விசுவேசுவரன் அப்பொழுது விழித்துக் கொண்டிருந்ததால் எழுந்து போய்க் கதவைத் திறந்து, 'யார்?' என்று கேட்டான். அவன் எதிரில் ஒரு பெண்ணுருவம் நின்றது. அது 'நான்தான் ராஜேசுவரி' என்றது. 'ராஜேசுவரியா? இந்த நடுநிசியில் எங்கே வந்தாய்?' என்றான் விசுவேசுவரன். 'உங்களைப் பார்க்கத்தான்! என்னோடு கொஞ்சம் வருகிறீர்களா?' என்றது அந்த உருவம். துடிப்போடு 'எங்கே?' என்றான் விசு

வேகவரன். ‘வாருங்கள், சொல்லுகிறேன். எங்காவது போய்த் தனிமையில் பேசிக் கொண்டிருக்கலாம்' என்றாள் ராஜேசுவரி.

பாவம்! விகவேகவரன் என்ன கண்டான்? தன்காதலி ராஜேசுவரியுடன் தனித்துப் பேச ஒரு சந்தர்ப்பம் கிடைத்ததே என்றெண்ணி மறுமொழி கூறாமல் அவள் பின்னே நடந்தான். நல்ல நிலவு வெளிச்சம். ஊர் அடங்கி நிம்மதியாக இருந்தது. குருடன் கோலைப் பற்றிக்கொண்டு நடப்பதுபோல விகவேகவரன் ராஜேசுவரியைப் பின் தொடர்ந்து சென்றான். பல தெருக்களைக் கடந்து ஆற்றங்கரைக்குச் சமீபமாக உள்ள தோப்புக்கு அவர்கள் வந்தனர். தோப்புக்குள் வந்ததும் அந்தப் பெண்ணுருவம் பேயுருவமாயிற்று. கண நேரத்திற்குள் அவன் தாடையில் ‘பளீ'ரென்று யாரோ அடித்தது போலிருந்தது. அப்படிப்பட்ட அடி அவன் ஆயுளில் எப்பொழுதுமே வாங்கியதில்லை. அங்கிருந்து தப்பித்தோம் பிழைத்தோமென்று குடல்தெறிக்க ஓட ஆரம்பித்தவன் வீட்டில் வந்துதான் நின்றான். மறுநாள் அவன் படுத்த படுக்கையிலேயே இருந்து ‘ராஜேஸ்வரி - பேய் - பிசாசு' என்று கடைசி நிமிஷம் வரையில் பிதற்றி விட்டு உயிர் நீத்தான்.

அந்த நடுநிசியில் என் வீட்டுக் கதவு தட்டப்படும்போது எனக்கு இந்தக் கதை ஞாபகத்துக்கு வராமல் என்ன செய்யும்? அதை நினைக்கும்போதே என் உடல் சிலிர்த்தது. அப்பொழுது கதவைத் தட்டுவது, அந்த வீட்டில் திடீரென்று இறந்துபோன இளம் விதவையின் ஆவியாகத்தானிருக்க வேண்டுமென்று சந்தேகித்தேன். அப்படித்தானிருக்க வேண்டுமென்று முடிவும் கட்டினேன். உடனே என் மனதில் இருந்த பயம் அதிகமாயிற்று. கதவு கொஞ்ச நேரம் வரையில் தட்டப்பட்டது என் காதில் நன்றாய் விழுந்தது. அதைக் கொஞ்சமும் லட்சியம் செய்யாமல் நான் போர்வைக்குள்ளேயே சுருண்டு முடங்கிக் கிடந்தேன்.

*

இரவு நெடு நேரம் கழித்துத்தான் நான் உறங்கினேன்—காலையில் நெடுநேரங் கழித்துத்தான் நான் எழுந்தேன். கண்ணைத் துடைத்துக்கொண்டு பார்த்தபோது சேதுராமன் கொடுத்த ‘நிழலின் நிழல்' என்ற புத்தகம்தான் முதலில் என் கண்ணில் பட்டது. அந்தப் புத்தகம்தானே இரவு முழுவதும் எனக்குப் பீதியை உண்டாக்கி நித்திரையைக் கெடுத்ததற்குக் காரணமாய் இருந்தது! அந்தப் புத்தகத்தில் என்னதான் எழுதி இருக்கிறது என்று பார்க்க ஆவல் தூண்டியது. அதை எடுத்துப் படிக்கலானேன்.

பாதிப் புத்தகம் படிக்கும் வரையில் மூளையைக் குழப்பும்படியான பயங்கரமோ பைத்தியம் பிடிக்கும்படியான திடுக்கிடும் சம்பவமோ ஒன்றும் இருந்ததாகத் தெரியவில்லை. விடேன் தொடேன் என்று முழுவதையும் படித்து விட்டேன். முன்னால் செய்திருந்த பயங்கர எச்சரிக்கைக்கு ஆதாரமாக எதுவும் அந்தப் புத்தகத்தில் இல்லை. கதை இது தான்: ஒரு பேய் தன் நிழலைக்கண்டே பயப்படுகிறது. அந்த நிழல் தன்னுடைய நிழலைக் கண்டு பயப்படுகிறது. முதலில் பேய்க்கு நிழல் உண்டா என்பது விளங்காத புதிர். அதற்குப் பின் பேயின் நிழலுக்கு நிழல் உண்டா என்பது ஆராய்ச்சிக்குரிய விஷயம். இதெல்லாம் பேயைப் பார்த்தவர்கள்தான் சொல்ல வேண்டும். வெறுப்போடு அந்தப் புத்தகத்தைத் தூக்கி மேஜையின்மீது எறிந்து விட்டுப் பல் துலக்கப் போனேன்.

வாசற் கதவை யாரோ இடித்தார்கள். போய்த் திறந்தேன். சேதுராமன் நின்று கொண்டிருந்தான். "என்னடா, ராத்திரி வந்து கதவை எவ்வளவு நேரம் இடிக்கிறேன்? நீ திறக்கவே இல்லையே? நன்றாகத் தூங்கி விட்டாயோ......?" என்று கேட்டான்.

"நீ இராத்திரி வந்து கதவை இடித்தாயா? நான தூங்கவில்லை. நீ கொடுத்த புத்தகத்தில் கவனமாய் இருந்தேன். அடாடா-மன்னித்துக் கொள்" என்றேன்.

"அதை இரவோடு இரவாகவே படித்து விட்டாயா? அட பாவி, அதற்காகத்தானே நடு ராத்திரியில் உன் வீட்டை நோக்கி நான் ஓடி வந்தேன்!" என்று சேதுராமன் மிகவும் பரிதாபமாகச் சொன்னான்.

"எதற்காக......?"

"அந்தப் புத்தகத்தை இராத்திரியில் படிக்கக்கூடாது. அதைத் தெரியாத்தனமாக உன்னிடம் எடுத்துக் கொடுத்து விட்டோமே என்று பயந்து ஓடி வந்தேன். நல்லவேளை அதைப் படித்துவிட்டு நல்ல நிலைமையிலேயே இருக்கிறாயே!" என்று ஒரு பெருமூச்சு விட்டான் சேதுராமன்.

"இத்தனை நாழிகை எனக்குப் பைத்தியம் பிடித்திருக்கும் என்று நினைத்து நீ ஓடி வந்தாய் போலிருக்கிறது. அதெல்லாம் ஒன்றும் நேர்ந்து விடவில்லை. நீ ஒரு பைத்தியக்காரன். அந்தப் புத்தகத்தை எழுதினவன் ஒரு பைத்தியக்காரன்" என்று கேலியாகச் சொல்லிவிட்டுப் பல் தேய்க்க ஆரம்பித்தேன்.

உண்மையில் யார் பைத்தியக்காரன் என்பதை இங்கு தெளிவாக்க வேண்டுமா?

# பொன் விழா விற்பனை!

விசேஷ கவனத்துடன் தயார் செய்யப்பட்டவை ஒவ்வொன்றும் ஐந்து வருட உத்திரவாதம்

No. 1



Size 6½"

5 ஜுவல் க்ரோம் 32/- ரோல்டுகோல்டு 35/-
7 ,, க்ரோம் 37/- ரோல்டுகோல்டு 40/-
15 ,, க்ரோம் 46/- ரோல்டுகோல்டு 48/-

No 2



Size 7½"

5 ஜுவல் க்ரோம் 31/- ரோல்டுகோல்டு 35/-
7 ,, க்ரோம் 33/- ரோல்டுகோல்டு 37/-
15 ,, க்ரோம் 45/- ரோல்டுகோல்டு 47/-

No 3



Size 11"

5 ஜுவல் க்ரோம் 22/- உயர்ரகம் 24/-
ரேடியத்துடன் 24/- செண்.செகண்டு 25/-
வாட்டர் புரூப் 15 ஜுவல் 60/-

No.



Size 8½

5 ஜுவல் க்ரோம் 32/- ரோல்டுகோல்டு 34/-
7 ,, க்ரோம் 34/- ரோல்டுகோல்டு 36/-
15 ,, க்ரோம் 48/- ரோல்டுகோல்டு 56/-

No 5



Size 6½"

5 ஜுவல் க்ரோம் 24/- உயர்ரகம் 27/-
5 ,, ரோல்டுகோல்டு 30/- உயர்ரகம் 32/-
15 ,, க்ரோம் 45/- உயர்ரகம் 48/-
இம். டைம்பீஸ் 24/- உயர்ரகம் இம். 25/-
பாக்கெட் வாட்ச் 12/- உயர்ரகம் 15/-

பாக்கிங், போஸ்டேஜ், விற்பனை வரி இலவசம்

**CARONA WATCH CO.**
**Post Box No. 6729, Calcutta – 7**

# ப்ளாண்டர்ஸ்
## ஹை க்ரோன்
## நீலகிரித்
# தேயிலை




## நீங்கள் ரசிக்கக்கூடிய ருசிக்காக

THE PLANTERS COMPANY, LTD.,
COONOOR, NILGRIS S. INDIA.

## ஹெர்குலஸ் தான் இந்தியாவில் மிகச் சிறந்த சைகிள் என்பது எவ்விதம்



ஹெர்குலஸ் சைகிள்கள் எங்கெங்கு சென்றாலும் அந்தந்த இடங்களின் சூழ்நிலைக்கு மிகவும் ஏற்றவையாகத் திகழ்கின்றது. ஒவ்வொரு தேசத்தின் விசேஷத் தேவைகளை ஹெர்குலஸ் கம்பெனி இஞ்சினியர்கள் நன்கு அறிந்திருப்பதினால்தான் இது சாத்தியமாகிறது. நூதன அமைப்பு, மிகவும் உயர் ரகப் பொருள்கள், இணையில்லா வேலைப்பாடு ஆகிய குணங்களால் ஹெர்குலஸ் சைகிள்கள் உலகத்திலேயே மிகவும் விரும்பத் தகுந்ததா யுள்ளது.



# Hercules



# ஹெர்குலஸ்

எல்லா பிரபல வியாபாரிகளிடமும் கிடைக்கும்

THE HERCULES CYCLE & MOTOR CO. LTD., BIRMINGHAM, ENGLAND.




அவனைவிட வேறொரு மாணவனும் அவ்வளவு அக்கறையாகப் பரீக்ஷையில் தேறுதலையோ, அல்லது அதிகம் உழைக்கவோ இல்லை. அடிக்கடி பரீக்ஷையில் தோல்வி மேலும் அதிக நேரம் புத்தகங்களுடன் கழிக்கவே தூண்டிற்று. அதில் யாதொரு பிரயோசனமும் இல்லை. படிப்பில் கவனம் செலுத்தவோ அல்லது விஷயங்களை மனதில் வைக்கவோ முடியவில்லை. இவ்வாறு மனமுடையும் தருணத்தில்தான் ஒரு நண்பன் "க்ருஷனை"ச் சிபார்சு செய்தனன்......

**மாணாக்கர்கள் மிகவும் தீவிரவாதிகள். ஆனால் கல்வியினால் பெறும் மதிப்பிற்காக தேக நலத்தை இழப்பதென்றால் கல்வியின் நலன்கள் பயனற்றதே. நீண்ட நேரப் படிப்பு, சுத்தமான காற்றும் தேகாப்யாசமுமின்மை, இவை ஈரல், மூத்திரக்காய், குடல்கள் இவற்றை மந்திக்கச் செய்கின்றன. அதனால் தேங்கியுள்ள அசுத்தங்கள் ரத்த ஓட்டத்தையும் அசுத்தப்படுத்துகின்றன. ஒவ்வொரு அறிவும் பாதிக்கப்படுகின்றது. அநேகமாக முதன்மையாகத் தேறக் கூடியவர்களும் தோற்குமாறு ஏற்படலாம்.**

**தேக உழைப்பின்மையும், நீண்ட நேரம் உட்கார்ந்திருப்பதினாலும் ஏற்படக் கூடிய விஷங்களினால் பாதிக்கப்பட்டால் இன்றே "க்ருஷனை"க் கொண்டு தாக்குங்கள். க்ருஷனிலுள்ள லோக தாதுக்கள் உபாதைகளின் மூல காரணத்தை ஆறுவிதங்களில் தாக்குகின்றன. மூத்திரக் காய்கள், ஈரல் குடல்களும் இயற்கையாகவே இயக்கப்படுகின்றன. பரபரப்பு, உற்சாகமின்மை அசுவாரசியம், இவை ஒழிந்து ஊக்கமும், உற்சாகமும் திரும்பக் கிடைக்கின்றன. ஒவ்வொரு மனோசக்தியினும் சரியானபடி ஞாயம் வழங்கப்படுகிறீர்கள். கெமிஸ்டுகளிடமும் வியாபாரிகளிடமும் "க்ருஷன்" ரூ. 1-10-0க்குக் கிடைக்கின்றது.**

"க்ருஷன்" ஈ க்ரிபீத்ஸ் ஹ்யூஸ், கோ., லிட்., (மான்செஸ்டர், இங்கிலாந்து) அவர்களால் தயாரிக்கப்பட்டு கார் & கம்பெனி, லிட்., (பம்பாய், மதராஸ் கல்கத்தா) அவர்களால் விநியோகிக்கப்படுகின்றன.




## நீங்களும் அந்த க்ருஷன் உணர்ச்சியைப் பெறலாம்

REGD. No. M. 4392